உ

கற்பகவிநாயகன் றுணை.

சிதம்பரம்

ஸ்ரீசபாநாதர்பேரில்

# முத்துத்தாண்டவர்

பாடியருளிய

## கீர்த்தநம் - பதம்.

இஃது

சிதம்பரம்

கருணாநந்தசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

திருவையாறு

சாமிநாததேசிகரால்

சிந்தாத்திரிப்பேட்டை

கேசவமுதலியாரவர்களது

பிரபாகரஅச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

நளஸு - ஐப்பசிமீ.



உ

சிவமயம்.

சபாநாதர்பேரில்

முத்துத்தாண்டவர் பாடியருளிய

# கீர்த்தநம்.பதம்-இவைகளின்- அகராதி.



---





சபாநாதர்பேரில்

# மாரிமுத்தாப்பிள்ளைமுதல்

## சிலவித்வான்கள்பாடிய-கீர்த்தநம்-பதம்-இவைகளின்-அகராதி.

---



---



உ

சிவமயம்.

# முத்துத்தாண்டவர் சரித்திரம்.

சீர்தருகாவிரி திகழ்சோழநாட்டில்- அடியார்க் கருள்செய்யும் பொருட்டுப் பரமசிவம் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிராநின்ற ஸ்தலங்களுள் ஒன்றாகித் திருஞானசம்பந்தசுவாமிகள் திருவவதாரஞ்செய்து ஞானப்பாலுண்டருளியமகாக்ஷேத்திரமாகிய சீர்காழியில் வீற்றிருக்கின்ற தோணியப்பருக்கு வாச்சியத்தொண்டுசெய்யும் பேறுபெற்றகுலத்தில் தோன்றித் தாண்டவனென்கிற பெயர்பெற்றுச் சிவநேசத்துடன் வளர்ந்துவருகையில் முன்வினையினால் கர்மவியாதியொன்று சம்பவிக்க அதனால்தங்கள் குலத்துக்குரியதாகிய தொழில் கற்றுக்கொள்ளுவதற்கில்லாமல் காலந்தோறும் ஆலயத்துக்குப்போய்ப் பிரமபுரீசரையும் திருநிலைநாயகியையுந்தோணியப்பரையும்பயபத்தியுடன் தரிசனஞ்செய்தும்- மற்றைக்காலங்களில் அந்தச்சிவாலயத்தொண்டுசெய்கின்றவளாய்ச் சிவநேசத்துடன் சிவநாமகீர்த்தனம்பாடிக்கொண்டிருக்கும் ஒரு தாசிவீட்டுக்குப்போய் அந்தத்தோத்திரத்தைக் கேட்டுக்கொண்டிருப்பார். அவள் சுற்றத்தாருக்கும், இவர்சுற்றத்தாருக்கும், அன்னியோன்னியம் இல்லாமையால் அவள்வீட்டுக்குப்போகிறது சம்மதியில்லாமல் அவரிடத்தில் வெறுப்புற்று ஆதரணைசெய்யாமலிருந்தார்கள். அப்படிஇருக்கையில் ஒருநாள் மிகவுமனவருத்தமடைந்து சிவாலயத்தில் போய்ச் சுவாமியையும் அம்மையையுந்தரிசித்துத் தோத்திரம்பண்ணிக்கொண்டிருந்து பசியினால் சரீரத்துக்கிளைப்புண்டாகச்சோகத்துடன்வாகனக்கிடங்குக்குள்போய்ப்படுத்துக்கொண்டு சிவத்தியானத்துடனே நித்திரை செய்துவிட்டார். அது அந்தக்கோயில் ஸ்தானிகருக்குத் தெரியாமையால் அர்த்தஜாமம் ஆனவுடன் கோயில்திருக்காப்பிட்டுக்கொண்டுபோய்விட்டார்கள்.

அவர்கள்போய்விட்டபின்பு- சற்றுநேரத்துக்கெல்லாம் நித்திரைநீங்கியெழுந்து மெய்ப்பிணியினாலும்பசிப்பிணியினாலும் வருந்தித்தோணியப்பரைத் தோத்திரஞ்செய்தார். உயிருக்குயிரா யெங்கு

ம்நிறைந்திருக்கும்பரமசிவம் அன்பனது வருத்தத்தைத் திருவுளங் கொண்டு தம்மிடப்பாகத்துமையவளைப் பார்த்தருள அந்தக்குறிப் பையுணர்ந்துக்கொண்டுசகலஉயிர்களையும்பெற்றவளாகிய உமையவ ள்கிருபைகூர்ந்து அந்தக்கோயில்பெரியகுருக்களுடையபத்துவயதுள் ளகுமாரத்தியைப்போல்வந்துவியசனப் படுகிறவனைப்பார்த்து நீ யேன்இப்படி வியசனப்படுகிறாயென்ன.

தாயே நான்பூர்வம் என்னபாவஞ்செய்தேனோ தொலையாதகர் ம்மவியாதி சம்பவிக்க அதனால் வருத்தப்படுகிறது மன்றி வறுமை நோயென்பதொன்று நேரிட்டதனாலும் வருந்துகின்றேனென்று சொன்னார்-அதைக்கேட்டு நீவியசனப்படவேண்டாம் உனக்குச்சம் பவித்திருக்கிறவியாதியும் வறுமையும்நீங்கி நீசௌக்கியமடைவதற் கு நான் ஒருஉபாயஞ் சொல்லுகிறேன்-ஆனால் இப்போது உனக்கு மிகுந்தபசியுண்டாயிருப்பதும்பால் காணுகின்றது அந்தப்பசிதீர அன்னங்கொடுக்கிறேன் சாப்பிடென்று கோயில் அன்னம்வட்டகை யுடன்கொடுக்க வாங்கிப்புசித்துப் பசிதீர்ந்தவுடன் எந்தாயே,இந்த வியாதிநீங்கத்தக்க வகையெதுவோ அதனைச்சொல்லவேண்டுமென்ன க் கோயில்குருக்கள்குமாரத்திபோல் வந்திருக்கும்பார்வதியார் நீசி தம்பரத்துக்குப்போய்ச் சபாநாதனைப்பாடினால்இந்தவியாதிநீங்கிச் சௌக்கியமடையலாம் இதுதான் உபாயமென்றுசொல்ல,

எனக்குப்பாடத் தெரியாதே நான் என்னென்று பாடுவேனெ ன்று சொன்னார் நீ அதைக்குறித்து யோசிக்க வேண்டியதில்லை சி ற்சபைக்கெதிரில்நின்று தரிசிக்கும் போது அங்கு தரிசனத்துக்கு வந்திருக்கும் திருக்கூட்டத்தாராலே என்னசொல் உண்டாகின்ற தோ அந்தச்சொல்லை முதலாக வைத்துக்கொண்டு பாடத்தொடங்கி னால் சபாநாதர்கிருபையினாலே பாடவாக்குண்டாமென்று சொல்லி உமையவள் ஒருசோதியாக மறைந்துவிட்டாள் - அப்படி மறைந் துவிடவே அச்சமு மிகுந்ததுயரமுங்கொண்டு என் அஞ்ஞானத்தி னாலே குருக்கள் குமாரத்தியென்றே நினைத்திருந்தேனே, லோகமா தாவாகிய பார்வதியாரென்றுதெரிந்துக்கொள்ளாத பாவியானேனே, இவ்வளவெல்லாம் கட்டளையிட்டருளிய என்தாய் தன்னுடையஉண் மையையுந் தெரிவித்து எனக்குநேரிட்டிருக்கிறவியாதியையும் இப் போதே தீர்த்துவிடலாகாதா - சிதம்பரத்துக்குப்போகும்படி கட் டளையிட்டருளவேண்டுமோ - ஆனால் திருவுளப்பாங் கெப்படியோ- அதுயாரால் அறியத்தக்கது ஒருவராலும் அறியத்தக்க தல்லவென் று எண்ணிக்கொண்டு அதுமுதல் நித்திரைசெய்யாமல் திருநிலைநா

யதி சந்நிதிக் கெதிரில்வந்து தோத்திரஞ் செய்துகொண் டிருந்
தார்-அப்படி இருக்கையில் உதயகாலமானதால் ஸ்தானிகர் முத
லானவர்கள்போய்த்திருக்காப்பு நீக்கி உள்ளேசென்று அம்மைசந்
நிதியில் நிற்பவரைநோக்கிச் சமீபத்தில்வந்து நீ யிங்கே எப்படி
வந்தாய் உன்னை உன்வீட்டார் தேடுகிறார்களே என்று வினவத்
தான் வந்ததும்தனக்குக்கிடைத்த நன்மையையுஞ்சொல்ல அவர்
கள்கேள்விப்பட்டுக் குருக்கள்வீட்டி லிருந்த வட்டகையவரிடத்தி
லிருப்பதைக் கண்டதுமன்றி அவர்முகத்தில் ஒருதேசசுவிளங்கி
யிருப்பதையும்பார்த்து ஆச்சரியமடைந்து அன்றுமுதல் முன்
போல் தாண்டவனென்று அழைக்க மனம்ஒவ்வாமல் முத்துத்தா
ண்டவனென்று உபசாரமாக அழைக்கத்தொடங்கினார்கள்.

அப்பால்திருநிலைநாயகி உத்தாரப்படி பொழுதுவிடிந்தவுட
னேபுறப்பட்டுச்சிதம்பரத்துக்குப்போனார் - அப்படிபோனவர் தி
ல்லையெல்லையைக் கண்டமாத்திரத்தில் சாஷ்டாங்கமாகப் பணிந்தெ
ழுந்து தோத்திரஞ்செய்து உள்ளேபோய் வீதிப்பிரதக்ஷணஞ்செ
ய்து தில்லைமூவாயிரவர் வாசஞ்செய்யும்வீதியையும்வணங்கி ஆலயத்
துக்குச்சென்று சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து நித்தியனுஷ்டா
னவிதிகளைமுடித்துக்கொண்டு ஈரவுடையுடன்சென்று சந்நிதானத்
தில்அஷ்டாங்கபஞ்சாங்கத்துடன்பணிந்து எழுந்து துதிசெய்து அ
ன்பின்மிகுதியால்மனமுருகிப்புளகமடைந்து ஆனந்தக்கண்ணீர்பெ
ருகும்படிபரவசப்பட்டுநிற்கையில்நடேசமூர்த்தியின் திருவருளா
ல்தரிசனத்துக்குவந்திருப்பவர்களில் ஒருவாக்குண்டாக அதனைப்ப
ல்லவியாகவைத்துக்கொண்டு ஒருகீர்த்தனம் பாடித்தோத்திரஞ்செ
ய்தார்.

அப்படித்தோத்திரஞ்செய்வதைக் கேட்டருளிச் சபாநாதர்தி
ருவுளத்தில்களிகூர்ந்துஅவருக்கிருந்தவியாதி எல்லாம்நீங்கும்படி
டாக்ஷித்துஐந்துபொன்பணம்பஞ்சாக்ஷரப் படியின்மேல் வைத்து
எடுத்துக்கொள்ளும்படிகட்டளையிட்டருளினார் அந்தக்கட்டளையை
மறுக்க அஞ்சிப்பணத்தைஎடுத்துக்கொண்டு தமக்குநேரிட்டிருந்த
தீராப்பிணிதீரும்படி ஆனந்தநடேசமூர்த்தி கடாக்ஷித்தருளிய திரு
வருளின்பெருமையை எண்ணியெண்ணிக் களிப்படைந்துபின்பும்
பலமுறைஅஷ்டாங்கபஞ்சாங்கத் துடன்பணிந்துதோத்திரஞ்செய்
துபிரியாவிடைபெற்றுக் கொண்டு சீர்காழிக்குப்போய் அன்றுமு
தல்தினந்தோறும் சபைக்குவந்து அம்பலவாணமூர்த்தியைத் தரி
சித்து அவ்விடத்தில் என்னசொல்தம்முடையசெவிக்குக்கேள்வியா

கின்றதோ அதையே பல்லவியாக வைத்துக்கொண்டுகீர்த்தனமா
வதுபதமாவதுபாடிச்சிதம்பரேசுவரர் கட்டளையிட்டருளுகிறபண
மும்பெற்றுக்கொள்ளுகிறவர் ஒருநாள் சிற்சபைக்கெதிரில் வந்துநி
ற்கும்போது சபாநாதர் கட்டளையினால் அங்குத் தரிசிக்கின்றதொ
ண்டர்கள்யாதொன்றும்பேசாமலிருந்தார்கள் - அப்போதுபேசா
தேநெஞ்சேஎன்று ஒருகீர்த்தனம்பாடிக்கட்டளைப்பிரகாரம்பஞ்சா
க்ஷரப்படியில்வைத்த பணத்தை ப்பெற்றுக்கொண்டுசீர்காழிக்குச்
சென்றார்இவ்வாறுநடந்துவருகையில்ஒருநாள்பழையபடிசீகாழியி
லிருந்துபுறப்பட்டுச் சிதம்பரதரிசனத்துக்கு வருகையில் கொள்ளி
டமென்னும்நதியில் அதிகப்பிரவாகம்வந்துஒருவரும்போகக் கூடா
மையாகவிருக்கவே சபாநாதனைத்தரிசிப்பதற்கில்லையே யென்னு
ம்ஏக்கங்கொண்டு கொள்ளிடக்கரைமேல்நின்று - காணாமல்வீணிலே
காலங்கழித்தேனேயென்று ஒருகீர்த்தனம்பாடினார் அந்தக்கீர்த்த
னத்தைக்கேட்டருளிச்சபாநாதர் திருவுளத்தில் கிருபைகூர்ந்துபிர
வாகம்விலக்க கட்டளையிட்டருள - அந்தநதியைக்கடந்து வருபவர்
மனக்களிப்பினால் தரிசனஞ்செய்வேனே)என்று ஒருகீர்த்தனம்பாடி
னார் - பின்புசிற்சபையில்வந்து சபேசனைக்கண்டவுடன் (கண்டபின்
கண்குளிர்ந்தே)யென்று ஒருகீர்த்தனம்பாடினார் அதன்பின்புஒரு
நாள்வரும்போது மார்க்கத்தில் தம்மைச்சர்ப்பந்தீண்ட அதற்கு
(அருமருந்தென்கிற ஒருகீர்த்தனம்பாடினார்- பாடியவுடன்விஷமிற
ங்கிற்று-இவ்வாறு சபாநாதர்பேரில் அனேகங்கீர்த்தனங்களும் பத
ங்களும் பாடித் தோத்திரஞ்செய்துகொண்டிருந்து சபாநாதரது
கிருபையினால் அனேகமகத்துவம் விளங்கப்பெற்றுக் - கடைசிநா
ளில் (மாணிக்கவாசகர்பேறெனக்குத்தரவல்லாயோ அறியேன்) என்
கிற கீர்த்தனம் பாடும்போது சிற்சபையில் ஒருஜோதியுண்டாக
அந்தச்சோதியில் விதேகத்துடன்கலந்துவிட்டார்.

சபாநாதர் துணை.

---

முத்துத்தாண்டவர்சரித்திரம்

முற்றிற்று.





உ




சிவமயம்.

# சபாநாதர்பேரில்

## முத்துத்தாண்டவர்பாடியருளியகீர்த்தநம்



கீர்த்தநம்- இராகம்-கல்யாணி ஜம்பைதாளம்.

பல்லவி.

பூலோககயிலாசகிரிசிதம்பரமல்லாத் - புவநத்தில் வேறுமுண்டோ

அநுபல்லவி.

சாலோக - சாமீப- சாரூப-சாயுச்ய-சபைவாணராநந்தத்
தாண்டவம்புரிவதாற் ... ... (பூலோக)

[ சரணங்கள். ]

௧. நாலுமஹாமேருவென்னும் நாலுக்கோபுரநிலையும் - நவரத்நமணி
களாலொளி சித்ரமதில்களும் -மேலுலகையளவிடுதற் போலுயர்
ந்தேதெவெயில-விரிந்தகம்பத்திரள்களுந் ... ... *

காலுலவுமாயிரக் - கால்மணி மண்டபமும்- நவ-கீங்கையுநிறைந்த
சிவ - கங்கையின்விசாலமும் - ஆலிலையின்மாலு - மயனுலுமறியா
நபேரம்பலமுமேவுவோர்க்-கற்புதம்புரிதலாற்... ... (பூலோக)

௨. வேதமுதலெனுமூல - நாதர்தூபியுமேரு- வில்லியார்சிவகாம-வ
ல்லியார்கோயிலும் - மாதவர்விண்ணவர்முனிவர்-போதகர்வித்யா
தரர்-மாளிகைகள்சூளிகைகளும் ..... ..... ... *

ஏதமொருசற்று - மனுகாதகட்டளைகளு- மிரவிபோலிலங்குகின்ற
விந்த்ரவிமானங்களுங் - காதலுற்றேசண்ட - பூதலத்தோரெல்லாங்
காணநூறுயிரங்-கண்வேண்டுமென்கையாற் ... .........(பூலோக)

௩. மேவார்தொழுந்தில்லை - மூவாயிரப்புநிதர் - வீதியுஞ்சைவர்திரு
வீதியுமடங்களுந் - த்ராவதபசிதவிர - வாவாவெனுஞ்சத்ர- சாலை
யும்பலசோலையும் ... ... ... ... ... *

பூவாவிகளும்வயலுமோவாமலேபெருகு-பொன்னிநதியுந்தெருவு
மன்னியவளங்கண்டு - தேவாரமூவர்முதற் - பாவாணரனைவருஞ்
சிவஸ்தலத்தினிலதிகந்-தில்லையையெனல்லகையாற் ... ... பூலோக(க)



கீர்த்தநம்- இராகம்-கல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

சேவிக்கவேண்டுமையா - சிதம்பரஞ் - சேவிக்கவேண்டுமையா

அநுபல்லவி.

சேவிக்கவேண்டுஞ்சிதம்பரமூர்த்தியர்ந் தேவாதிதேவன்
திருச்சந்நிதிகண்டு ... (சேவிக்கவேண்டுமையா)

[சரணங்கள்.]

க, காரானைமாமுகத்தைந்துகரத்தானை - கற்பகராயனைமுக்குறுணி
யானைச் - சீரார்புலியூர்ப்பதிமேலைவாசல்வாழ் - தேவர்சிறைமீ
ட்டம்சேவற்கொடியானைச் ... ..... (சேவிக்கவேண்டு)

உ, சிங்காரமான சிவகங்கையின்முழுக்கே - சிவகாமசந்நிதி முன்பா
கம்வவந்து - பங்காகவேபிரதக்ஷணமுஞ்செய்து - பக்தர்கள்
சித்தர்கள்-பணிவிடையோர்தொழுச... ... ... (சேவிக்கவேண்டு)

௩, சிட்டர்பரவுந்திருமூலத்தானைச் - சிற்றம்பலமென்னும்பேரம்
பலத்தானை - அட்டதிக்கும்புகழம்பலவாணனை - ஆண்டவனைத்தில்
லைத்தாண்டவராயனைச் ... ... (சேவிக்கவேண்டு)

௪, நல்லதிருவிழாவானித்திருத்தேரும் - நாடெங்குமேபுகழ் நற்
கோபுரநான்குந்- தில்லைமூவாயிரவர்வளர்வீதியுந்-திருமஞ்சனம்
மார்கழிதரிசனமுந் .... ... சேவிக்கவேண்டு(உ)

கீர்த்தநம் - இராகம் - தோடி - ஏகதாளம்.

பல்லவி.

இன்னமொருஸ்தல - மின்னிமொருகோயி
லின்னமொருதெய்வ - மிப்படியுண்டோ ✻

அநுபல்லவி,

பொன்னம்பலத்திலிற் - பூமலராயன் - போற்றுஞ்சிதம்பரர்
பொற்பதமேயல்லால ... ... (இன்னமொரு)

[சரணங்கள்,]

௧. காசிகழுக்குன்றங் கீளஸ்த்திரிகச்சி - கமலாலயந்திரு வண்ணமலையுறை - ராசியமான தெய்வங்கட் கொடுக்கமு நடனமுமிங்கே நளினமுமிங்கே ... ..... ... (இன்னமொரு)

௨. பூலஞ்சந்திர சூரியர்மண்டலம் பாரித்திரன்பதி பத்தியமண்டலம் பூலோகத்திற்றுக்கயிலாசம்வைகுண்டம் - ப்ரம்மமண்டலத்துப்-புதுமையுமிங்கே ..... ... (இன்னமொரு)

௩, கரிசற்பிணிகள்பறந்துபோஞ் - சிவகங்கையின்மூழ்கிக்கநகசபைவந்த - தெரிசித்தளவினிற்றேவனுமாவன் - தெரிசித்தாரைக்கண்டோற்றேவனுமாவன் ... ... இன்னமொரு(௩)

---

கீர்த்தநம்-இராகம்-கல்யாணி- ஜம்பைதாளம்.

பல்லவி,

தீர்த்தமுதன்மூர்த்தியுந்தலவிசேஷமுமெங்கள் - சிவசிதம்பரத்திற் [ருனே

அநுபல்லவி.

தீர்த்தநஞ்செய்யுமெய்ப் - பொருண்மூன்று மொன்றென்று
கேண்மையோடுவேதாகமம்பகருமாகையால் .... ... (தீர்த்தம்)

[சரணங்கள்.]

௧, தெரிசித்தப்போதந்த பிரமனெந்நாளும் செலுத்தும் பாக்கியங்களுண்டாம் - பரிசித்தபோதுலகுபதினுலும் ரக்ஷிக்கும்பதுமவிழியோனுகலாம் - உருசிக்கும்பானீயமன் பாகவுட்கொள்ளினுருத்திரன்பதவிபெறலாம் - வருசிற்பராநந்தத்தீர்த்தமதிலாடவே-மகேஹரனுமெயாகலாம் ... ..... (தீர்த்தம்)

௨. கல்லுமுதன்மணல்களுந் துகள்களும் லிங்கமெனக் -கருதம்வேதங்களெல்லாந் - இல்லதனிலுண்டானகுளம்படியினிரோலாஞ் சிவ

சங்கையென்றுசொல்லலாங்-குல்லைமாற்புசழரிய கூபங்களாதந்தக் கூபமெஃறேபகரலாம்- வல்லநடராஜர்பதங்காணுமலேதலத்தில்-வசித்தவருமுத்திபெறலாம் ... ... (தீர்த்தம்)

௫, சிந்தைமகிழ்சம்பந்தர்தரிசிக்கயாவருஞ் - சிவசுரூபமானதிறமும் - நந்திமுதலிந்திரர்மூவாயிரம்புநிதரும் - நாரணருந்தொழுதேத்தம்வ - வந்துதெரிசித்தவர்க்குமாமுதபேரின்பவாழ்வுதருகின்றபசமுங் - கந்தமுறும்கோதைச் சிவகாமிபங்கினடனமிடு கடவுளருள்வடிவானகையால் ... ... ... தீர்த்தம்(சு)

கீர்த்தநம்-இராகம்-நீலாம்புரி - திரிபுடைதாளம்.

பல்லவி.

சிற்சபைதனிலேகண்டு கொண்டேனென்றும்.

அநுபல்லவி,

அற்புதக்கூத்தனைநாடி-அவனியெங்குந்தேடி... ... (சிற்)

[சரணங்கள்.]

க, வையந்தருஞ்சிவகாமிமாலே-கொன்றை- மாலையெனவணிந்தானை மாந்தர்க்குமுன்னாலே - செய்யும்நாள்வாசனையின்மேலே கடற்றிரையெனவேவரும்பிறவிதீருமாகையாலே ...... (சிற்சபை)

௨. அடியவருக்கருள்புரிகுவானைப் - பண்டு - அரிபூஜைக்குவந்துடன்சக்ரமளித்தோனைத் - துடியிடையாண்மலைமகள் பங்கோனை அன்பாய்த் - தொழுவார்க்குக்கதிகொடுக்குந் தூயவெளியானைச்

௩. தேவர்வான்கோனயன்மாலாதி - மெய்ம்மை - திகழ்மூவாயிரவரிலொருவனென்றநீதி- மூவர்பாடத்கருளநாதி-வந்து - மூவுலகுந்தொழுத்தில்லைதனிடஞ்செய்ஜோதி ..... (சிற்சபை)

௪. முநிவர்புரிதவமகிழ்ந்தேயன்று - இன்ப - முடிவிலாவருளளித்தமுதலேநாமென்று-தனியேநீயதிபெனவின்று - நின்ற - சாக்ஷியைக்கண்ணுற்ற கநகசபையருகேநின்று ... சிற்சபை(சி)

கீர்த்தநம்-இராகம்-ஆகிரி - ஆதிதாளம்.

பல்லவி,

நடநங்கண்டபோதேயென்றன் சடலஞ்செய்தபாக்கியமையா

அநுபல்லவி,

விடமணிந்தகண்டமன் அண்-மேவுமம்பலவாணுவுன்... ...(நடநம்)

(சரணங்கள்.)

௧. அரியயனுந்தேடிக்காணு - வுருவமாய்நின்றகாரணு - மருமலர்ப்
பச்சைகொண்டு நகுமன்பர்சித்தைதயெரிஎன்று .. (நடநம்)

௨. அன்னைதந்தைநீயேயென்று-வுன்னேயேமிகநம்பினேன் - என்னை
யேநீகாக்கவேண்டுஞ்-சொர்ணசபைநடராஜா ... (நடநம்)

௩. பதஞ்சலிவியாக்ரபாத- ரிதயம்புகுந்தாண்டவனே - நிதப்பிரியா
ச்சிவகமி நேசனேசிதம்பரேசனே ... நடநம் (௩)



கீர்த்தநம்-இராகம்- சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஈசனேகோடிசூரியப்ப்ரகாசனேகநகசபை

அநுபல்லவி,

வாசனேயாநந்தநடராஜனே ..... ஈசனே

[சரணங்கள்,]

௧. அறியேனெஞ்சினேசம்- பிறியேன்வருங்கருமங்- குறியேனறிவில்
லாத-சிறியேமன்னைநீயாளாய் ... ... (ஈசனே)

௨. நினையேனுனைவேடமும் - புனையேன்சிவகங்கையி - னனையேன்
கொடியதீ வினையேனுய்யவேயாளாய் ..... (ஈசனே)

௩. துதியேன்வணங்காவஞ்ச - மதியேனென்றுளுஞ்சபா - பதியே
நம்பினேன்சிவ-கதியேதந்தென்னையாளாய் ..... ஈசனே (௩



கீர்த்தநம்-இராகம்-சுருட்டி- ஜம்பைதாளம்.

(பல்லவி-)

அம்பரசிதம்பரபரம்பரசதாநந்தவடிகண் மறவாதருளும்நாதினமு [மே

அநுபல்லவி,

செம்பொன்மலைச்சிலைவளைத்ததிவ்ய......... பரமாநந்த
சம்போ சிவசங்கர ஸ்ரீதாண்டவ நடேசா.... ... (அம்பர)

[சரணங்கள்.]

௧. கங்கைமதியரவசையக் - காதிற்குழைபசையச் - செங்கைமழுத்
துடியசையச்-செய்யஜடையசையப்- பொங்குபுலியதளசையப்-
பொற்பாதச் சிலம்பசைய - மங்கைசிவகாமவல்லி மகிழ்ந் நடம்
புரியும் ... ..... ... ... (அம்பர)

உ. நின்மலநிராலம்ப-நிர்க்குணநிரஞ்சந சின்மயாநந்தபர சிற்குண சொரூபா - வன்மலக்கீக ணீகபருள்வாரியுறவேயென து - புன்மையறவுமைகாணப் பொதுவிலநடம்புரியும் .... (அம்பர)

ங. துங்கமறையாகமங்கள் - சொன்னவிதிவழுவாமற் - சிங்காரமாமகங்கள்செய்துஜினந்தினமு - மங்காதநீறுபுனே - வைதிகமூவாயிரவர் - நங்கோவென்றேபரவநாளும்நடம்புரியும் அம்பர (அ)

---

கீர்த்தநம்-இராகம்-பந்துவராளி ஏகதாளம்.

பல்லவி,

நீதயவாயென்னையாளா யிரு-மாதவர்பாடுங்கங்காளா

அநுபல்லவி,

நாதகிருடியதோளா-உமை காதலாகுஞ்சிதத்தாளா .... (நீதய)

[சரணங்கள்]

க. ஒலிகடல்விடமுண்டநேயா-சிறு புலியினதளுடையதூயா- மெலியுமடியவர்சகாயா-பதஞ் சலிபுலியணிநடராயா ... (நீதய)

உ, காலனைவதைசெய்தகாலா - புலிப்- பாலனையாண்டகபாலா மேலனைத்தருமநுகூலா-வைத்து-கோலனைவென்றதிரிசூலா (நீதய)

ங. மூவர்பரவியவிநோதா - திரு- நாவலூரன்விடுதூதா - யாவரும்நம்பினபாதா-மகா-தேவகநகசபைநாதா ..... நீதயவா (க)

---

கீர்த்தநம் இராகம்-குறிஞ்சி ஏகதாளம்.

உனைநம்பினேனையாசரணம்-நாகம்
புனைசம்பே நடராசாபுலியூர்வாழீசா ... (உனை)

(சரணங்கள்.)

க. இருவர்தம்பிழைசைகொண்டகாதா - தித்தியென நின்று நடஞ்செய்யுமிக்கிகப்பொற்பாதா-திருநாவலூரன்விடுதூதா- தில்லைச்சிவகாமியொருபாகா சிதம்பரநாதா ..... ... (உனை)

உ. பழுவுழைதரிக்கின்றகையா - கொன்றை - மலர்மாலைபுனைகின்றவடிசுடர்மெய்யா - எழுபுவிதுதிக்கின்றதுய்யா - வன்புரிடமாயிருந்தின்புமுடனுறைமையா ..... ... ... (உனை)

௩, நெடியமால்பன்தேடிக்காணு - தெங்கும் - நிறைந்தவா - வெனும்பெ - ல்லாமணிந்திடும்பூணு - அடியவர்தொழுந்தமிழ்வாணு - தில்லையம் பதிநடராஜாவம்பலவாணு ... ... ... ... உன்ன(ம)

கீர்த்தநம்-இராகம்-ஆநந்தபைரவி-ஏகதாளம்.

(பல்லவி.)

என்னையெனக்குத்தெரியச்சொல்வாய் - தில்லைப் - பொன்னம்பலச்ச [பேசே

அநுபல்லவி.

தன்னையறியுமறிவது நீ - சற்றுந் தப்பவொண்ணாதிப்போ சாமிசமயம் ... ... ... ... ... (என்னை)

[சரணங்கள்]

க. பூதமுநானல்ல - பொறிபுலனநானல்ல - ஓதுமநாதி - யொருநான் கும்நானல்ல - போதக்கருவி - புறம்பலவுள்ளல்ல - வாதமுநான ல்லவெல்றமயங்கும் ... ... ... (என்னை)

உ. ஒளியல்லவிருளல்ல - உடலினிறவதல்ல - வெளிறுகறுப்பல்ல - வி ளக்கிசாத்ததல்ல அளியுமலமாயையல்ல - வலலைதபிரிவதல்லதெளி வுமறிவுமல்ல தெளியாததல்ல... ... ... (என்னை)

௩, பாசமுநானல்ல - பதிபசுநானல்ல - பேசிலணுவுமல்ல - பெரியவு ருவுமல்ல - ஈசரிலங்கவிலங்கும்பொருளல்ல - கோசரமேயெக தேசமுநானல்ல ... ... ... ... (என்னை)

௪, சேர்ந்துவருவதல்ல - சேராதிருப்பதல்ல - ஓர்ந்துகளிப்பதல்ல - வோராதிருப்பதல்ல - பேர்ந்துவருவதல்ல - பேராத்தனியுமல்ல - ஓர்ந்தவுயிரோது தில்லைநடேசா ... ... என்னை(ம)

கீர்த்தநம்-இராகம்-பரசு ஆதிதாளம்-

பல்லவி.

உன்பாதமேதுணைகிருபைசெய்யா ............ பஞ்ச
லென்பானெனக்குவேறில்லைமெய்யாய் ............ *

அநுபல்லவி,

அன்பாகியம்பலத்தாடுமையா - னல்வழி - யெனவொளிர் பனசய னன்முத - லினரனு - திநந்திறை கநகசபேசா (உன்)

க, டலதெய்வமுந்தெய்வமெனக்குறியேன் - நின்னை - பலதெய்வமா

திலொன்றையுமறியேன் - வலதெள்ளவுமில்லாச்சிறியேன் - மரு வியவிருவினை- யிருளற - வருளம ரருமூல - கருமகிழ் - திருநட ராயா ... ... ... ... ... (உன்)

௨, என்னளவினிற்சித்தமிரங்காதோ-வந்து - சொன்னதென்ன தப ராமுகமேதோ-உன்னுதலுசவுவதெப்போதோ - உடல்வளை-பட வடர்-அடல்வினை-கெடவொரு- மடவர - லொடுமிடும் - நடனவி நோதா ... ... ... ... ... ...(உன்)

௩, இனியவொவொனக்கென்குறைதீரா யோக - முநிவோரொழ்வி த்தவுபகாரா-தனியாம்பேரும்பெற்றபுலியூரா-சயமிகு -புயவலி- மூயலக-னெளியம னியபதமருள்தம நியசபைநாதா உன் (௰௫)

கீர்த்தநம்-இராகம்-சௌராஷ்ட்டிதம்- அடதாளம்,

பல்லவி,

சந்ததமுன்பாதசேவைதந்தென்மேற்கிருபையாராய்,

அநுபல்லவி;

செந்திருமேவும்புலியூர்வாழ்-சிற்சபைநடேச-ஸ்வாமி -(சந்த)

(சரணங்கள்,)

க. பண்சிலம்போசையளிக்கப்-பாவியேன்வினையொளிக்க - கண் ணாநந்தந்துளிக்கக்-கண்டென்மனதுட்களிக்கச் ... (சந்த)

உ. சிந்துரப்போர்வையுமாடத் - தேவர்கள்நான்மறைபாட -ஐந்தெ மூத்துருவப்நாட-வணிமலர்தூவிக்கொண்டாடச்... ......(சந்த)

௩. பங்கயத்தயன்மால்காணு - பாதனேபொற்பணிப்பூணு - தங்கு வில்வாசுகிநாணு சம்புச்வயம்பலவாணு ..... சந்த(௰௩)

கீர்த்தநம்-இராகம்-காம்போதி - அடதாளம்;

பல்லவி,

சித்தரின்னமுண்டோபூலோகத்திற்-சித்தரின்னமுண்டோ

அநுபல்லவி,

அத்தர்தில்லைவாழு - மம்பலவாண - ராநந்தத்தாண்டவரா யல்லாமற் ...... ... (சித்தரின்னமுண்டோ)

[சரணங்கள்.]

௩. ஒப்பிநீவித்தைகளெப்படியுலகத்தி - னுடலேசெப்பாக - உயிரோ
பந்தாகச் - செப்பிநீவித்தைகள்விளையாடியபின்பு - செப்புமில்
லைபந்துமில்லையென்றொளிக்குஞ்... ...(சித்தரின்னமுண்டோ)

௨. இதஞ்சொல்லிக்கின்னரர்கிம்புருடர்பாடி - விடந்தனிலம்பிகை
கண்களிகூடப் - பதஞ்சலிவெய்புலியஞ்சலிபண்ணப் - பதஞ்ச
லியாமற்-பதஞ்சலிபண்ணுந் ... ... ......(சித்தரின்னமுண்டோ)

௩. மாலொடுபிரமனுந்தேடரிதான - மலர்ப்பாதங்கண்டு - வணங்
கித்தெரிசிக்கச் - சாலோகசாமீபசாரூபசாயுச்யந் - தந்தருள்தா
ண்டவராயரல்லாமற் ... ... ... ... ... (சித்தரின்னமுண்டோ(யச)



கீர்த்தநம்-இராகம்-கலியாணி-ஏகதாளம்.

பல்லவி.

காணாமலிருந்தாலென்-கலக்கந்தெளியாதே... ... *

அநுபல்லவி.

பூணாரமரவணிந்த-பொன்னம்பலத்தானைக் ........(காணாமல்)

[சரணங்கள்.]

க. திரிபுரத்தையெரித்தானைச் - செங்கையின்மான் றரித்தானைக் -
கரியுரித்துப்போர்த்தானைக் - கங்கைமுடித்தானை - அரியயனுந்
துதித்தானை - யஞ்செழுத்தாயுதித்தானை - உருவிலியையெரித்தா
னை - யொளிவெண்ணீற்றனைக் ..... ... ..... ......... (காணாமல்)

௨. தலைமாலைதரித்தானைத் - தக்கன்சிரந்துணித்தானை - உலகெலாம்
நிறைந்தானை - யுவமையில்லானை - மலைதநுவாய்வளைத்தானைமற
லிவிழவுதைத்தானைக் - கலைமதியைப்புனைந்தானைக் - கண்மூன்
றுடையானைக்.......................................... (காணாமல்)

௩. நாலுகோபுரத்தழகும் - நன்மதின்மண்டபத்தழகுஞ் - சீலமிகு
ந்தெருவழகுஞ் - சிவகங்கையழகும்-ஆலமிடற்றினிலழகும் -ஆடு
மம்பலத்தழகும் - பாலின்மொழியுமையழகும் - பரமாநந்தத்
தழகுந்........................................ ... ... ...காணாமல(யஙு)



கீர்த்தநம்-இராகம்-ஆகிரி-ஏகதாளம்,

பல்லவி,

கண்டவர்விண்டிலரோ-யநுதிநம்-விண்டவர்கண்டிலரோ... ... *

அநுபல்லவி,
கண்டவர்விண்டிலர்- விண்டவர்கண்டிலர் - அண்ட
ரண்டங்கடந்தாதிஜோதிபாதம்.......... *கண்டவர்
[சரணங்கள்,]
க, மூத்திபத்திசத்திமுப்பால்விளைவதல்ல - நெற்றியொற்றுமொரு நிலைமைதானுமல்ல - தத்தெய்யென்றுதாளமத்தளமதிரவே - தித்தியென்றுமன்றுளாடுந்திருக்கூத்தைக்.................(கண்டவர்)
உ, அந்தக்கரணமொருநான்குசத்தாதி - யைந்துமடக்கியறிவுடன் கூடிச் சந்தித்துநின்றருள் - சற்குருவும்போற்றும் - அந்தமதாகிய-வாநந்தநடநத்தைக்...................................(கண்டவர்)
ரு,ஒவ்வுதானுமல்ல வௌவ்வுமிவ்வுமல்ல- நவ்வுஞ்சிவ்வுமல்ல - நாதநடுவணையிற் - சிவ்வமவ்வுமல்ல சேர்ந்தவட்டமல்ல- அவ்வுமுவ்வுமல்ல-வாதிசூக்ஷநடநம்...............................கண்டவர் (மசு)

—∗—

கீர்த்தநம்-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.
பல்லவி,
பாததரிசநஞ்செய்யும்போதே - செய்த
பாவம்வெருண்டுநிசபலமானதே......*
[அநுபல்லவி]
வேதம்பரவுந்தில்லை-மன்றுண்மீமேகமெத்த..........*
மிடுக்குள்ளகாளியுந்திடுக்கிடவுலகமும் ......... *
நடுக்கிடத்திகுர்தியென்-றடுக்குடனடித்திடும்........(பாததரிசநம்)
[சரணங்கள்,]
க, பத்தியுடனேபூசைபண்ணுப்பாலன் - தன்னைப் - பற்றிப்பிடிக்க வந்தபாசக்காலன் - தத்திவிழவேயுதைத்தருள்காலன் - வெற்றித்தாண்டவம்புரிந்தென்னை - யாண்டவனெனவரு - மாண்டவரொதும்பையும்-பூண்டயன்சிலம்பணி ... ... ... (பாததரிசநம்)
உ, சுந்தரமூர்த்தியார்தமிழுக்காக - வும்பர் - தொழுதிடத்தூதுக்கிசைந்தன்பாக - அந்தமின்பாவைக்குமுன்பதாக - வந்த-வரகாசிவதிரி-புரமெரிபடநகை-புரிவரதர்பரம ரகசியமான (பாததரிசந)
ரு, ஆலவிடமருந்துஞ்சர்வேசன் - கங்கை - யணிந்தவன்கயிலைமாமலைவாசன் - மாலுக்கிளையவுமைமகிழ்நேசன் - சதுர் - மறைவுரிமுடிமிசை - யுறைபவனழல்திகக்- கறைவிடவரவொடு-பிறையையுமணிபவன்...........................................பாததரிசநம்(எய்)

கீர்த்தநம்-இராகம்- கலியாணி- ஏகதாளம்.

பல்லவி.

ஆடினதெப்படியோ - நடநம்நீ - ரீாடியதெப்படியோ

அநு பல்லவி.

தேடியமெய்ம்பொருளே- வளமேவுஞ் - சிதம்பரத்தே
யொருசேவடிதூக்கிநின் ... ... (ஆடின)

[சரணங்கள்.]

௧. ஒன்றல்லரண்டல்லஒன்றிரண்டுமல்ல - நன்றல்லதீதல்ல நாதவிந்துமல்ல - அஃறல்லவின்றல்லவாதியந்தமல்ல - மன்றுண்பரகதவல்லிகொண்டாட ... ... ... (ஆடின)

௨. ஆணல்லபெண்ணல்ல-வன்றியலியுமல்ல-காணரூபமல்ல - காணுரூபமல்ல-சேணல்லவேயொரு- தேவர்க்குள்ளமீதவ - வாஞு தற்பச்சை-மடந்தையொண்டாட ... ... (ஆடின)

௩. பூதங்களல்ல - புறம்பல்லவுள்ளல்ல வேதங்களாலே - விளங்கும்பொருளல்ல- ஆதவன்போலே - யசையும்வடிவல்ல - மாதுமையாள்பச்சை-வல்லிகொண்டாட ... ... (ஆடின)

௪. பஞ்சவர்ணமல்ல - புஞ்சபூசமுமல்ல - நெஞ்சினினைவுமல்ல - நினைவிற்கினைவுமல்ல-அஞ்சுமுகமுமல்ல வாருதாரமுமல்ல - வஞ்சிமரகதவல்லிகொண்டாட ... ..... (ஆடின (௰அ)

கீர்த்தநம் இராகம் - மோகனம்-ஏகதாளம்.

பல்லவி.

ஆடிக்கொண்டாரந்தவேடிக்கைகாணக் கண்ணாயிரம் வேண்டாமோ

அநுபல்லவி.

நாடித்துதிப்பவர்பங்கிலுறைபவர் - நம்பர்திருச்
செம்பொனம்பலவாணர் ... .. (ஆடிக்)

[சரணங்கள்.]

௧. மங்கயபாதச்சிலம்பசைந்தாடப் - பாதச்சதங்கைகள் கிண்கிணென்றாடப்- பொங்குமுடமீனயுரித்துத்தரித்த - புலித்தோலசைந்தாடச் - செங்கையிலேந்தியமான்மழுவாடச் - செம்பொற்குழை கண்முயலகனுடக் - கங்கையிளம்பிறைச்செஞ்சடையாடக் - கநகசபைதனிலே ..... ... ... (ஆடிக்)

உ. ஆரநவமணிமாலைகளாட - வாமேரவம்படம்விரித்தாடச் - சேரணிகொன்றைமலர்த்தொடையாடச்-சிறம்பலத்தோராடப் பேரணிவேதியர் தில்லைமூவாயிரம் - பேர்களும் பூசித்துக் கொண்டு நின்றாடக் - காரணிகாளி யெதிர்த்து நின்றாடக் - கநககசபை தனிலே ... ... ... ... (ஆடிக்)

௩. நிர்த்தகணபதிவேலர்நின்றாட - நின்றயன்மாலுடனிந்திரனுட-முப்பத்துமுக்கோடிதேவருடனே-முநிவரும்நின்றாட - மெய்ப்பத்திமேவும்பதஞ்சலியாட - வியாக்ரமபாதரும் நந்தியுமாட-கொப்புற்றகாதாள்சிவகாமியம்மையுங்-கூடவே நின்றாட - ஆடிக் (௰௩)

கீர்த்தநம்-இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

பல்லவி,

சம்போசங்கரமஹாதேவா - சதாசிவ - சம்போசங்கரமஹாதேவா

அநுபல்லவி,

செம்பொற்சபையினடஞ்செய்யுஞ்சிதம்பரஹரஹரசிவ- சம்போ

[சரணங்கள்,]

க, அரிமாத்பிரமற் கரியோமன - சிந்தந்தெளிந்த - வன்பர்தமக்குரியோனை - புவனங்களில் - திரியுமுப்புரமெரிசெய்தசச்சிதாநந்தபர ..... ..... ..... (சம்போசங்கர)

உ, அனவரதத்தாண்டவராயா-கைலைவெற்பை-யசைந்தவனை ரக்ஷித்தநயா-மருவார்கொன்றை- புனலொடுமதிதும்பை - புனையுஞ்சிற்பர அரஹரசிவ ... .... (சம்போசங்கர)

௩, இருமுநிவர்க்கருளும்நாதா மூவாயிரவ - ரென்றுமர்ச்சனைசெய்பொற்பாதா- வெனையாண்டருள் - திரிபுரசிவகாமிநிறமும்மருவிய அரஹரசிவ ... ...சம்போசங்கர(உ௰)

கீர்த்தநம்-இராகம்- நாதநாமக்கிரியை-ஏகதாளம்.

பல்லவி,

ஆடியபாதா-விருவர்- பாடியகாதா*

அநுபல்லவி,

நீடியவேதா-தில்லை-நிர்த்தவிநோதா ... ..... (ஆடியபாதா)

[சரணங்கள், ]

க, இருமுநிவருமொரு - நிருபனுமருகினில்-உருகியுருகிமநம்ஹரஹரவெனவே ... ... ... (ஆடியபாதா)

(உ) அந்தரதுந்துமி- யுத்துடியுந்தவில்-திந்திமிதிமிதிமி - தித்திமி
மெனவே.................................................(ஆடியபாதா)

(௩) கும்பமுலையுமையாள்- சம்பிரமத்தொடுகாண - உம்பர்தொழவு
ருசிதம்பரந்தனில்.......................... ஆடியபாதா (௰௧)

---

கீர்த்தநம்- இராகம்-கர்ன்னாடகசாரங்கம்-ஏகதாளம்.

(பல்லவி)

தெரிசித்தளவின் முக்திபெறலாம் - புலியூரானைத்
தெரிசித்தளவின்முக்திபெறலாம்...............*

அநுபல்லவி.

தெரிசித்தளவின்முக்தி.........பெறலாம் புலியூரானைத்
திரம்பரநடம்புரிசிதம்பரதேவனைத்.........தெரிசித்*

(சரணங்கள்.)

(௧) அரனைமன் மதனைச்சங்-கரனை மான்மழுவேந்தும் - கரனைச்ச
டையிற்கங்காதரனைப்-பரனைச்சருவதயா - பரனைப் பராநிசம் -
பானைத்தில்லையில்வாழ்சிதம்பரனைச்சங்கரனைத் .... ...தெரிசித்*

(உ) மாயனையாண்டவு - பாயனைமலைமகள்-நேயனையழிவில்லாக்கா
யனைத் - தூயனைவைபோக-ராயனைநால்வேத-வாயனைத்தாண்டவ.
ராயனைச்சிவாயனைத்.......................................தெரிசித்*

(௩) ஈசனையம்பர - கேசனைபதிகப்ர - காசனைக்கைலாச வாசனைப்
பூசனைசெயுமன்பர் - நேசனைத்திரிபுர - நாசனைச்சிவகாமிநேச
னைச்சபேசனைத் ......................................தெரிசித்(௨௨)

---

கீர்த்தநம்-இராகம்-கேதாரகௌளம்- ஏகதாளம்.

(பல்லவி.)

மாயவித்தைசெய்கிருனே-யம்பலவாணன் - மாயவித்தைசெய்கிரு[னே

அநுபல்லவி.

மாயவித்தைசெய்கிருன் - காயமொன் றெடுத்துக் கொண்டு
நேயமான வெளிதன்னிலுபாயமாய்க்கூடித்திரிந்து - (மாய)

(சரணங்கள்.)

(௧) உண்டுபெண்ணிவைக்கிருன்-கொண்டுகொண்டுபோகிருன் - நன்
றக்குந்தீதுக்கும்நடுவாயிருக்கிருன் - பண்டுநாளும்வெளியெங்

கும்-பாரெங்குங்காணவொண்ணான் - அண்டர்தொழவம்பலத்தி னெண்டிகட்டியாடிக்கொண்டு ......... ... (மாயவித்தை)

௨ உண்கிறானுறங்கிறான் - உருவாந்தேரோட்டுறான் - சங்கேதத்தை மீட்டுறான் - தானேதீபங்காட்டுறான் - மங்கையுடன் கூட்டுறான் - மலைக்கண்கள்காட்டுறான் - அங்கலிங்கபீடமாக - விங்குமங்குமா யசைந்து ... ... ... .............................(மாயவித்தை)

௩, கூட்டுறான்வெகுசண்டை - மூட்டுறான்தத்துவத்தின் - மாட்டுறா னுலகம்பாராட்டுறான் - பின்னையுமோர் - ஆட்டிடையனம்பலத்தி லஞ்சாடுமேய்க்கிறவன் - காட்டுமெய்யிலாறுக்கப்பால் - வீட்டி லேகுடியிருந்து........ ... ... ... ... ... ...(மாயவித்தை)

௪, மண்ணுமல்லவிண்ணுமல்ல - வாய்வுமல்லதேய்வுமல்ல - பெண் ணுமல்லவாணுமல்ல பேசாமனின்றவிடம் - ஒண்ணிலிருந்தஞ் சையுமுண்டுபண்ணிக் கொண்டவன் - கண்மாயக்கார னென்றுங் கைக்குள்ளேயுஞ்சிக்காமல் .. .................மாயவித்தை(௨௩)

---

கீர்த்தநம்-இராகம்-பியாகடை-ஏகதாளம்.

பல்லவி,

ஆட்டுக்காலைத்தாரும் - என்சாமிவா - தாட்டுக்காலைத்தாரும் *

அநுபல்லவி,

ஆட்டுக்காலைத் தேடி யம்பலவாணரே - காட்டுப்புலியும் பாம்புங்காத்துக்கொண்டிருக்குதே - ஆட்டுக் ........ *

(சரணங்கள்)

௧, கின்னரர்கிம்புருடரா தியர்வீணையர் - கெருடகாந்தருவர் சித் தவித்யாதரர் - தன்னிகரில்லாததந்திரர்மந்திரர் - சரணஞ்சரண மென்றிருகைக்கூப்பிநிற்கப் - பொன்னின்விமாநத்தர்சி விகை வாகனத்தர் - பூசகணதிபர்போற்றியடிவிரும்ப - அன்னவாகனத் தன்விண்ணிலேறவாய - ஆட்டுக்காலைத்தேடிக் கோட்டுப்பன்றி யாயினான் ...................................... (ஆட்டுக்)

௨, முப்பத்துமுக்கோடி தேவர்குழாங்களும் - முநிவரான வரும் ரிஷிகளனைவோருஞ் - செப்பமானசந்திராதித்தருங்கூடிச் - செய ஜெயவென்றுபாதந்தம்மைத்தேடுகிறார்கள் - ஒப்பில்லாதகாளியம் பலத்தேநின்று - உன்றன்றாளைக்கண்டுதொந்தொமென்றுடுறாள்

மெய்ப்பதாகு மந்தக்காலேயெனக்கு தந்தால் - வேண்மேறுபத்
தஞ்சாம்விளையாட்டாகுஞ்சாமி ......................... ஆட்டுக்*

௩. ஆக்கியதிசைவளர்திக்குப்பாலகரு - மாதிவைரவரும் நாதரனை
வருந் தாக்கியதாவரசங்கமகோடிபுஞ்-சந்தித்துப்பாதத்தைக்கா
த்துக்கொண்டிருக்கவே -பாக்கியஞ்செய்தவன்முயலகனொருகா
லைப் - பற்றிமுதுகணையில்லவைத்துச்சுமந்துகொண்டான்- தூக்கி
யபொற்றுளையெனக்குத்தந்தாற்றலே சுமக்குஞ்சுமக்கும்போதும்
போதுஞ்சாமியிந்த.................................ஆட்டுக்(உ௪)

கீர்த்தனம்-இராகம்-தோடி-ஆதிதாளம்.

(பல்லவி.)

சுாமிதரிசநங்கண்டு-சபலமானேனானே..........*

அநுபல்லவி.

வாமியொருபாகர்சபைவாணராதினாயில்-சாமிதரிசநம்.

(சரணங்கள்.)

௧. அநுதினமுமடிபோற்று - மடியர்தமைநினையாத -மனிதனையுமீ
டேற்றவரமருளவே - தனனவெனவேபர தசாஸ்திரவிதிதவறுமை
த் - தினமுமுமைகாணநடஞ்செய்தருள்சிற்சபையில்......சாமி

௨. சோமனுயர்நதியரவுதூய - தாகியகொன்றைத் - தரிமமணியுஞ்
செஞ்சடாபாரனுர் - பூமன்முதன்முநிவோர்க - ணேமமாதவருட
ன் சாமளசொரூபர்பணிமேயமசபைதனிலே...............சாமி

௩. தேவாதிதேவருந் - தில்லைமூவாயிரரும்- பாவாணர்மூவர்தமிழ்ப
கரடியரும் - நவாரவேபுகழ்ந்து - பூவாலர்ச்சனைசெய்து - காவா
வென்றேதுதிக்குங் கநககசபைதனிலே ................சாமி(உ௫)

கீர்த்தனம்-இராகம்-கல்யாணி-ஏகதாளம்.

(பல்லவி.)

அம்பலவாணர்நீரோ-தென்புலியூ ரம்பலவாணர்நீரோ...*

(அநுபல்லவி.)

அம்பலவாணர்நீரோ - யன்பர்க்கன்பானசுவாமி - செம்பொற்
கிளிமொழியாள் - சிவகாமிநாதர்நீரோ.....................அம்பல

(சரணங்கள்.)

க, காலனைபுதைத்தீரோ - காமனையெரித்தீரோ - வேலனையீன்றீரோ - வேகவஸ்துவுநீரோ ........................................ அம்பல

உ, திரிபுரமெரித்தீரோ - திங்களைத்தரித்தீரோ - கரியையுரித்தீரோ - காலகாலரும்நீரோ.................................அம்பல

௩, இடைபிங்கலையுநீரோ - யேகப்ரம்மமுநீரோ - விடையின்மேல்வருவீரோ - வெட்டவெளியுநீரோ..........................அம்பல(உ௬)

கீர்த்தனம்-இராகம்-நாதநாமக்கிரியை-ஏகதாளம்,

(பல்லவி,)

ஆராராசைப்படார்நின்பாதத்திற் - காரராசைப்படார் - அருள்

அநுபல்லவி,

பாராய்ப்பதந்தாராய்துயர்தீராய்புலியூராய்நின்பாதத்திற் - காரார்

(சரணங்கள்,)

க, கநகமேனியன்பநக - சயனன்கஞ்சனுடன் - பதஞ்சலிபலிபோற்ற - அநவரதமுங் - கநகசபையுளாடிச் - இவந்தென்னைத்தேடிய பாதத்திற்..................................(காரார்)

உ, பாவித்தவெங்கனற்போலுற்றவந்தகன் - பாசத்தின்மேவிபேநசிப்பதேதுன்னைச் - சேவித்தவேளையிலேமுத்திபாலிக்கு நீ - தேவேயெனையாண்ட-கோவேநின்பாதத்திற்.................(காரார்)

௩, அருவரைத்தன்னையிருபதுகையா - லசைத்துப்பல்கொண்டெடுத்தராவணன் - ஒருபதுசிரம்நெரியவேமுன் - னொருவிரலூன்றுமருமலர்ப்பாதத்திற்..............................(காரார)

௪, மூவாயிரவரும்பூவார்மனிதரும் - முப்பத்துமுக்கோடிதேவர்முநிவருந் - தேவாதிதேவனேவாவாவென்றேத்திடுந் - தேசாசிவகாமிநேசாநின்பாதத்திற் ................................காரார்(உ௭)

கீர்த்தனம்- இராகம்-பந்துவராளி ஏகதாளம்.

(பல்லவி,)

நானேமுழுதும்நம்பினேன் -கநகசபையானேநின்பதந்தானே *

அநுபல்லவி.

ஆனேவாகனமாகக்கொண்டோனே புலியூரானே - யறியேனுஞ்சிறி யேன்-பிரியாதருள்செய்வாய் .... .... ... (நானே)

[சரணங்கள்.]

க- விடியாமிடியாத் கொடியார் பக்கலிற்றமிழ்ப் படியா தருள்செ ய்யவுங்-குடியாயிருக்குமுன் - னடியாருடனேயென்னைக் - கூட் டாய்-நாட்டாய்-காட்டாய்-திருநடம் ... (நானே)

உ. சனவிலுநனவிலு மனதிலுமுனை நாடிக் கவிபாடித் துதிசெய்ய வுந்-தினமும்வரந்தீனேயருளுன்பதியை யெண்ணித் - திருநாள் வருநா ளொருநா ளுனைக்கண்டு ... (நானே)

௩. அந்தரிசிவகாமசுந்தரிமணவாளா - வந்தரிதொழுந்தாளா - திந் திரிடிகுடிகு - திந்திமியெனவாடுஞ் - சிவனே சிவனே சிவனே துணையென்று ... ... ..... நானே (௨௪)

தாள்க்கீர்த்தநம்-இராகம்-கெவுளிபந்து- ஏகதாளம்.

பல்லவி.

ஐய்னே நடன்மாடியபொற்பாதா - ஆனந்தகயிலாயனே

அநுபல்லவி.

துய்யனேதிருச்சபை-தனில்தாண்டவந் - தோகுஜேம்தரி- தாகுதித் திமிதிகுர்திமென்ருெபாதந்தூக்கிய ... ... (ஐயனே)

(சரணங்கள்.)

க. கங்கைசடைக்கணிந்த - கருணேசாதவளங்கா - அங்கையின்மழு வேந்து-மரனேபரிமலிங்கா - செங்கைபார்ப்பதிடங்கி- ளுனும்வ ளர்பிரசங்கா-ஜெகுஜெம்தரி-தோகுதித்திமி- திகுர்தமெண்ருெரு பாதந்தூக்கிய ..... ... ... ... (ஐயனே)

உ-வேழமுகனைப்பெற்ற - விமலா நமச்சிவாயா - ஆழிதரித்தகைய- ளைமுருகந்தனேயா - சோழன்கைவெட்டுண்ட - தூயாவன்பர்ச காயா - ஜோகுஜெம்தரிதாகுதித்திமி - திகுர்தமென்ருெருபாதந் தூக்கிய .... .... ... (ஐயனே)

௩. சித்தஜனுடன்புர மெரித்த பாவநாசா - உத்தண்டர் சாவேசா- வுமைமகிழ்ந்திடுநேசா - சத்திமாகாளிமுன் - தலைகுனிந்திடவீ சித்-தாகுஜெம்தரி - தோகுதித்திமி - திகுர்தமென்ருெரு பாதந் தூக்கிய ..... ... ... ஐயனே (௨௫)

தாளக்கீர்த்தநம்-இராகம்- தோடி-சாபுதாளம்,
பல்லவி.
ஆடியவேடிக்கைபாரீ-ரைய-ராடியவேடிக்கைபாரீர்

அநுபல்லவி,

தேடியுமாலயன்காணுகபாதர் - தில்லைமூவாயிரர்கண்டவதீதர் -தா
டொழுவார்க்கருணைலகும்பிரக்கியாதர் - தம்பரமான சிதம்பரநாதர்
தாகுசேகிணசேகிணங்கிடததிங்கத்தோம்-திரிகிட ... *
ததிங்கத்தோம் திரிகிடததிங்கத்தோம் .... ... *
தாகுசேகிணசேகிணங்கிடததிங்கத்தோம் - திரிகிட ..... *
ததிங்கத்தோம்கிடததத்திமிதித்திமிதெத்தெய் ... *
ததிங்கத்தோம்கிடததத்திமிதித்திமிதெய்தெய் ... *
ததிங்கத்தோம்திரிகிடததிங்கத்தோம் கிடத ... ...*
தாம்தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ... *
தாம் தகுந்தரி தரிகு-திரிகுகு தரிகுஜெம்தரி ..... *
தந்த திந்தந்தந் தணந் தணந்திமி ... ... *
தந்த திந்தந்தந் தணந் தணந்திமி ... ..... *
தந்ததிந்திமிதக்கிடததிக்கிடததக ..... ... *
தந்ததிந்திமிதக்கிடததிக்கிடததக - தத்தடிங்குதடிங்குடிங்குகு
ததண தஜெணுத - ததண தஜெணுத - தத்ததிங்கணத்தோம்
ததிங்கணத்தோம்-ததிங்கணத்தோமென..(ஆடியவேடிக்கை)
(சரணங்கள்.)

க. அதிரும்வாணன்குட-முழவோசைதிசைமுட்ட-வந்தரதுந்து
பிநாத - மகிலமெல்லாமெட்ட-சதுர்முகனிசைக்கொத்தங்-கரு
திற்றுளந்தட்ட-சதியறிந்தயன்றுதை- தாக்கிமத்தளங்கொட்ட
தாகுசேகிணசேகிணங்கிடததிங்கத்தோம்-திரிகிட ... ...*
ததிங்கத்தோம்-திரிகிடததிங்கத்தோம் ... ... *
தாகுசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம்-திரிகிட .... *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம் கிடத ... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய் ... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய் ... *
தாம் தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ..... *
தாம் தகுந்தரி தரிகு திரிகுகு தரிகு ஜெம்தரி ... *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி ......................*
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி.................................*

தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக ...... ... *
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக - தத்தடிங்குதடிங்குடிங்குகு
ததணதஜெணுத - ததணத ஜெணுத - தத்ததிங்கணத்தோம்
ததிங்கணத்தோம் ததிங்கணத்தோமென...... .....(ஆடியவேடிக்)

உ. விரித்தசெஞ்சடையாட - விளங்குகுண்டலமாட - மென்கைமா
ன்மழுவாட-மேனியிற்பொடியாடத் - தரித்தவெம்புலியதண் - ம
ருங்கிலிசைந்தாடத் - தண்டைகிண்கிணிபிரு - தாளிலசைந்தாட
தாகுசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம்-திரிகிட .. ...*
ததிங்கத்தோம் திரிகிட-ததிங்கத்தோம் ... *
தாகுசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம்-திரிகிட ..... *
ததிங்கத்தோம்திரிகிட ததிங்கத்தோம் கிடத ... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய் ... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமிதெய்தெய் ... *
தாம் தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ..... *
தாம் தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ... *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி ... ... *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி ... ..... *
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக ..... ... *
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக - தத்தடிங்குதடிங்குடிங்குகு
ததண தஜெணுத - ததண தஜெணுத - தத்ததிங்கணத்தோம்
ததிங்கணத்தோம் ததிங்கணத்தோமென .........(ஆடியவேடிக்)

௩. நன்மைசேர் தும்புரு-நாரதரிசைபாட - நாதபிர்ம்மாநந்தத் - த
ழுந்தியாவருந்தேடத் - தம்மெய்மறந்திரு - மாதவர்கூத்தாடத்
தையலுமைமகிழ்-கொண்டிருவிழிநாட ... ... *
தாகுசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம்-திரிகிட ..... *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம் ... *
தாகுசேகிண சேகிணங்கிட ததிங்கத்தோம்-திரிகிட ..... ... *
ததிங்கத்தோம் திரிகிட ததிங்கத்தோம் கிடத ... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமிதெய்தெய் ..... *
ததிங்கத்தோம் கிடத தத்திமி தித்திமி தெய்தெய் ... *
தாம்தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ... *
தாம்தகுந்தரி தரிகு திரிகுகு தரிகுஜெம்தரி ..... *

தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி ... ... *
தந்ததிந்தந்தந் தணந் தணந்திமி ... ... *
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக ..... ... *
தந்ததிந்திமி தக்கிடத திக்கிடததக தத்தடிங்கு தடிங்குடிங்குகு
ததணத ஜெணுத - ததணத ஜெணுத - தத்ததிங்கணத்தோம்*
ததிங்கணத்தோம் ததிங்கணத்தோமென ... ஆடியவேடிக்கை)



தாளக்கீர்த்தநம்-இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

நடிப்பவனே - சிற்சபைநின்று - நடிப்பவனே

அநுபல்லவி,

நடிப்பவனேகங்கை முடிப்பவனேமறை படிப்பவனே விடங்
குடிப்பவனே ... ..... (நடிப்பவனே)

[சரணங்கள்.]

க, அரியுமயனும்விண்ணமரர் முநிவரு மனகதினகரர் பஞ்சசயன
மும் - உருகிஉருகியுள்ளொளியும் வெளியேயொளியும்வெளியெ
றவடியர் துதிசெய ... ... ..... *
தரிகுதரிகுகு தரிகுதரிகுகுதாம் ..... ... தாம்தத்தாம்
திரிகுதிரிகுகு திரிகுதிரிகுகுதீம் ... ..... தீம்தித்தீம்
தரிகு தரிகுகு தாம் ..... ..... ... ...திரிகுதிரிகுகுதீம்
தரிகு தரிகுகு திரிகுதிரிகுகு....... ... தத்ததெய்யத்தெய்யத்
திரிகிடதகத ததிங்கணத்தோமென்று...... ........(நடிப்பவனே)

உ, அண்டரண்டமுமண்டலங்களுமஞ்சலிசிரபந்தனத்தொடு - கண்
டுகண்டுளம்நைந்து பொங்கக்கணங்கணின்று வணங்கியின்புற*
தந்தந்தக தந்ததந்தகதாம் ... ..... தாம்தத்தாம்
திந்திந்திகி திந்திந்திகி தீம் ... ..... தீம்தத்தீம்
தந்த தந்தக தாம் ..... ... திந்திந்திகிதீம்
தந்த தந்தக திந்திந்திகி..... ..... ... ... தத்ததெய்யத்தெய்யத்
திரிகிடதகத ததிங்கணத்தோமென்று (நடிப்பவனே)

ங. பட்டரானவர் சிட்டரானவர் பத்தரானவர்முத்தரானவர் - இட்ட
மாம்புலிநட்டபரிதமிணங்கிநின்றுவணங்கியின்புற... .... .....*
தகத தகதக தகத தகதக தாம் ... ..... தாம்தத்தல்-

திகிததிகிதிகி திகிததிகிதிகி தீம் ... ..... தீம்தத்தீம்
தகத தகததகதாம் திகித திகிதிகிதீம் ... ... *
தகத தகதக திகித திகிதிகி ... ..... ... *
தித்ததெய்யத்தெய்யத் ... ..... ... *
திரிகிடதகத ததிங்கணத்தோமென்று ... (நடிப்பவனே)

மூவடுக்கொலித்தாளகீர்த்தநம்-இராகம் ஆநந்தபைரவி- ஆதிதாளம்.

பல்லவி.

நிருத்தஞ்செய்தாரோ ஐயர்-சதாநந்த - நிருத்தஞ்செய்தாரோ - ஐயர்:

அநுபல்லவி.

திருத்தமானமன்றுள் ... சிவசிதம்பரநாதர்
திந்திமி திமிதிமி திக்கிடத திக்கிடததிகு .... *
தத்திமிதிமிதக ததிங்கணத்தோமென (நிருத்)

[சரணங்கள்.]

க. அருமறையொலிகதிக்க - ஹரஹரஹரஹரஹரஹரவெனவே
வடியர்குழுந்துதிக்கத் - திருநுதலுமைமதிக்கச் - சிவசிவசிவசிவ
சிவசிவவெனவே - சேர்ந்திருமுநிகுதிக்க - தரிக்கதோந்தத்திமித
ரிகிடதத்தித்தாந்தாந் ..... ..... ... *
ததண ததண ஜெணு தஜெணுத தஜெணுத .... *
ததண ததணதக ததிங்கணத்தோமென ... (நிருத்)

உ. தித்திமத்தளநாதந் - திந்தோந் திந்தோந் திந்தோ மெனவே
ஜெகமெங்கெங்கணுமோதப் - பத்தரஞ்செழித்தோதப் - பம்பம்
பம்பம் பம்பம் மெனவேபகர்திருச்சங்கமுத ... *
தித்தித்தோந்தித்திமி திரிகிடதித்தித் தீந்தீந்தீந் *
திரிகுகுதிரிகுகு ஜெம் ஜெம் ஜெம்தரி ... ... ...*
தரிகுதரிதக ததிங்கணத்தோமென ..... ..... (நிருத்தம்)

ங. தரணிபவத்தைக்கெலிக்கத் - தகதகதகதகதகதகவெனவே தரித்
தல்கைமழுச்சொலிக்க-சுருதினமொண்ணம்பலிக்க - கலகலகலகலகல
கலவெனவே -, காலிற்சதங்கையொலிக்க ..... *
தரிகுகுந்தரிதித்தி தரிகிடதித்தித் தோந் தோந் தோந்
தகணக டிங்குகு தடிங்கு டிங்குகு ... ... *
தக்கணக கணதக ததிங்கணத்தோமென... நிருத்தம் (௬உ)

ஊவடுக்கொலிக்கீர்த்தநம்-இராகம்-கௌளிபந்து - திரிபுடைதாளம்.

பல்லவி.

ஆநந்தத்தாண்டவமாடிஞர்-தில்லை-யம்பலவாணஞர் ... *

அநுபல்லவி.

ஆநந்தத்தாண்டவமாடிநின்ருரரி - யருள்சித்தம் பெறச்சக்கொன்-றருச்சிக்குந்தனிப்புஷ்பந் - தரிச்சுத்தம்பதத்திற்பொற் - றிருச்சிற்றம்பலத்துணின் ... ... (ஞநந்தத்தாண்டவம்)

[சரணங்கள்.]

க. பாதச்சிலம்பு-கலீர் - கலீர்- கலீரென்னப் - பைப்பொற்குழைகள்-பளீர்-பளீர் - பளீரென்ன - வேதப்புராணந் - தத்தெய்தத்தெய்தத்தெய்யென்ன - விரித்துச்செஞ்சடைக்குப்பெண் - தரித்துக்குஞ்-சரத்தைக்கொன்-றுரித்துத்திண் - புரத்தைப்புன் - சிரிப்பிற்சங்-கரித்துநின் ... ..... ..... (ஞநந்தத்)

உ. மால்கைமத்தளந் - தஞதஞதஞவென்ன - மலர்ப்பிர்ம்மதாளங்கணீர் கணீர் கணீரென்னச்-சேல்விழிமாது - சபாசபாசபாசென்ன சிறக்கக்கிங் - கிணிச்சத்தந்-தறைக்குட்கிங் -கிணுக்கென்று-பிறக்கச்சொர்க்-கமட்டுக்குந்-திறக்கச்சடைநிறக்க ... (ஆநந்தத்)

ஈ. பத்தர்கள்தேகம்-விரீர்-விரீர் - விரீரென்னப் - பதஞ்சலிவியாக்கிரர்-ஜெபா-ஜெபா ஜெயாவென்ன - சித்தகணங்கள் -சிவா- சிவா-சிவாவென்ன- திடுக்குச்செந்-தணக்குத்திந்- திடுக்குச்செநி - தணக்கன்றங்-குடுக்கைக்கம் - புயச்செங்கை - யடுக்கத்தொனியெடுக்க [ஆனந்தத்(௩௩)

---

# இதுகொள்ளடக்கணமேல் நின்றுபாடிய

கீர்த்தநம்-இராகம்-காம்போதி - ஜம்பைதாளம். ௬.

பல்லவி,

காணுமல்விணிலே காலங்கழித்தோமே,

அநுபல்லவி,

சேணுடர்போற்றுந் தில்லைச் சிதம்பரஸ்தலத்தைக் - (காணுமல்)

[சரணங்கள்,]

க. சேரன்சோழன் பாண்டியன் இரண்ணியவன்மன் கோபுரமுஞ்குரவீரப்பபூபன் செய்ததிருமதில்களும் ... ... *

பாருலகும்போற்றுகின்ற பஞ்சாக்ஷரப்படிகளும்..........*
ஆரணங்கள்சூழ்ந்ததிரு வாயிரக்கால்மண்டபமும் (காணுமல்)

௨. கங்கையும்நிறைந்தசிவ கங்கையும்படித்துறையும் ...............*
மங்கைசிவகாமியம்மை வாசல்மணிமண்டபமுந்...................*
திங்களணிதிருமூல நாதரருட்சந்நிதியும்..................*
பொங்குசெல்வம்போலுயர்ந்ததங்கப்பேரம்பலமுங் (காணுமல்)

௩. நிர்த்தசபை கனகசபை சிற்சபையின்தெரிசனமும்..........*
முத்திபெறலாமெனவே முழங்குஞ்சின்னத்தொனியும்........*
பத்தர்க்குட்சிறந்த கோவிந்தராசர்சந்நிதியும்........ *
சுற்றிலுந்துலங்குரத்ந சொர்ணக்கொடிமரங்களும் (காணுமல்)
௪. தில்லைமூவாயிரவர் முனிவர்பெரும்வீதிகளும்..............*
அல்லும்பகலும்அளிக்கும் அன்னதானச்சிறப்பும் ........*
சொல்லரியமடங்களுஞ் சோலைகளும்வாவிகளும்...... *
நல்லதிருக்கூட்டங்களும் நாலுதெருவீதிகளுங். (காணுமல்)(௧௨)



கீர்த்தநம்-இராகம்-பைரவி-ஆதிதாளம்

(பல்லவி-)

தெரிசனஞ்செய்வேனே- முத்திகொடுக்குந்- திருவம்பலவாணே
[சனை

அநுபல்லவி.

அரியயனிருவருமறியாதவிமலனை கரியுருபோர்த்த ... *
நங்கருணைக்கடலைத்தேடி ... ... (தெரிசன)

[சரணங்கள்.]

௧. செஞ்சடைமதிகங்கையுந் - திருமுகமுஞ் - சிறந்தபங்கயச்செங்
கையும்- பஞ்சாக்ஷரப்படியும் - பாதத்தணிசிலம்பும் - நெஞ்சார
வேதுதித்து-நின்றெனதுகண்ணாரக் ... ..... (தெரிசன)

௨. காளியுடன்வாதனை- யிருமுநிக்கும் காக்ஷிகொடுத்தநாதனை - மா
லுடன்பணியிரணிய - வன்மன்றனக்கருள் - காலகாலனையன்பர்
கருத்திற்குடிகொண்டானைத் ..... ..... (தெரிசன)

௩. சிவகாமிபிராணேசனை - யெனையாண்டருள் - தில்லையம்பதியீச
னை-அவனிதொழுந்தயா-பரனையென்னையனை - சிவசிதம்பரதேவ
சிற்றம்பலவாணனைத் ... ... தெரிசன (௧௩)

கீர்த்தநம்-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

கண்டபின்கண் குளிர்ந்தேன் ஜனனக் கடலைக்கரை கடந்தேன்

அநு பல்லவி,

அண்டர்பிரானைக்- கருணைகடாக்ஷனை - யம்பலத்தைக்கண்ட - பேர்க்
கருள்மோக்ஷனை - அண்டபகிரண்ட - மும்படைநேயனை - யாண்டவ
னைநித்தியத்-தாண்டவராயனைக் ... ... (கண்டபின்)

[சரணங்கள்.]

௧. அந்திப்பிறைகங்கைதானசைந்தாடவே - யமரர்முநிவர் சிவசிவ
வென்னவே-சந்தித்தேயன்புடன் தும்புருநாரதர் - சங்கீதமேப
டிக்க - விந்தைக் கிசைந்தமால் மத்தளங்கொட்டவே - வேதனக
ணீரென்றுதாளம்முழங்கவே - திந்தோந்திரிகிடதோதிமியென்ன
வே சிந்தித்துநின்றிடு-மும்பர்கள்கோனைக் ... (கண்ட)

௨. பரவைத்தன்வாசலிற்றூதனைவேதனைப் - பத்தர்க்கு முத்தியளி
த்திடுங்கர்த்தனை - கரமதிற்சூலகபாலந்தரித்தானைக் - கங்காளனை
ப்பரனை-நிரமயமாகப்பரந்தருளுதனை-நித்தியகல்யாணனைச்சித்த
விநோதனைப் - பரம்பரமாகியவாண்டவனைக்கிருபை - பாரோர்
பாருக்கருள்-பேரம்பலத்தானைக் ... ... (கண்ட)

௩. தண்சேல்நல்விழிமாகாளிவாதுக்குத் தாக்களித்தெக்களி - சொ
லியேரண்டு - கண்படைத்தேயெதிர்த்தாடுகின்றாள் தலைகவிழ்த்த
ப்புறம்நிற்கவே - மண்ணிலொருபாதம் விண்ணிலொருபாதமாக
வேவைத்தூர்த்தநடனெஞ்செ - யண்ணலைக்கண்ணனையாளுமுக்க
ண்ணனை-யநங்கனைவென்ற கநகசபேசனை .... கண்ட (௩.கா)

# இதுவிஷந்தீண்டியவுடன்பாடியது.

கீர்த்தநம்-இராகம் மோகநம் - ஏகதாளம்.

பல்லவி.

அருமருந்தொருதனிமருந்தம்பலத்தேகண்டேனே

அநுபல்லவி,

திருமருந்துடன்பாகமருந்து- தில்லை - யம்பலத்தாடுமருந்து - இரு
வினைகளறுக்குமருந்து ஏழையடியார்க்கிரங்கு - மருந்து - அருமரு

(சரணங்கள்.)

௧. கொன்றைதும்பையணிந்தமருந்து - கோவைமீதிற்படர்ந்தமருந்து - மன்றுளேநின்றுமேமருந்து - மாணிக்கவாசகர்கண்டமருந்து ... ..... ... ... (அருமருந்)

௨. இந்திரரானவர்வானவர்தாமு - மிருடிகள்தமக்கெட்டாமருந்து சந்திரர்சூரியர் காணுமருந்து - தானேமுளைத்துத்தழைத்தமருந்து .. ... ... ..... (அருமருந்)

௩. திரித்திதித்தியென் றுமேமருந்து - தேவாதிமூவர்கள் காணுமருந்து - கருத்தைத்திருத்தி யிருத்துமருந்து - காலனைக்காலாலுதைத்தமருந்து ... ... ..... அருமருந்(௩எ)

கீர்த்தனம் - இராகம் - புன்னாகவராளி - ஆதிதாளம்.

பல்லவி,

என்றுசென்றுகாண்பேனென துகண்குளிர ...... ...*

அநுபல்லவி.

மன்றுள்பதஞ்சலிபுலியூர்வாழுஞ்சபாபதியை .. (என்று

(சரணங்கள்.)

௧. புண்டரீகமுகத்தழகும் - புன்சிரிப்பினழகும் - வண்டுதிறவிழியழகும் - வரிசைதந்தத்தழகும் குண்டலமுஞ்சவுக்களியுங்கொப்புதரித்திடுமழகும் - மண்டலமெல்லாம்விளங்கும்-கண்டசரத்தழகும் ..... ..... ... ... (என்று)

௨. மெய்யெல்லாம்வெண்ணீறு - விளங்கியவற்புதவழகுங் - கைகளிலேதரித்திருக்குங் - கனலும் டமருகமும்-பையரவம்பூண்டகையாற் - பயந்தீர்க்குமழகும்-வையமெல்லாமுய்யவங்கண்-வரவீசுங்கையழகும் ... ... ... (என்று)

௩. குஞ்சிதபாதத்தழகுங் - குனித்தவோர்பதத்தழகுங்- கஞ்சன்முடிமாலையொடு- கவின்பதக்கத்தழகுங்-கொஞ்சுமொழிசிவகாமி-கூடநிற்குமழகும் - நெஞ்சைவிட்டுநீங்காம னிதமுமனங்களிக்க-என்றுசென்றுகாண்பெனென துகண்குளிர ...(௩அ)

கீர்த்தநம் - இராகம் - கல்யாணி - ஆதிதாளம்.

பல்லவி.

காணமுத்திபெறலாமே-ஒருதரத்திற்-காணமுத்திபெறலாமே... ... *

அநுபல்லவி,

காணமுத்திதருந்தில்லைத் - தாணுவாயிருந்துபஞ்ச - பாணனைக்கண்ணுலெரித்தசோணகிரிவல்லவர் - புராணசுந்தரர்தமிழ்மூ - வாணருக்கருள்செயும்நீர் - வாணமொனும்பேரம்பலவாணர்தஞ்சிவந்தபாதங் [காணமுத்தி

[சரணங்கள்,]

க. பண்டுவிடமுண்டநீலகண்டபுரஹரசம்பு - முண்டகத்திருமணளர்புண்டரீகாசனர்துதி - கொண்டசிவசங்கர பிரசண்டகாலனையுதைத்துத் - தண்டனைபுரிநடேசர்புண்டரீகமலர்த்தாளைக் (காண)

உ. பஞ்சவதனமஹேசர்குஞ்சரசருமதரர் - வஞ்சிசிவகாமிநேசர்தஞ்சமென்றடைந்தவர்தம் -நெஞ்சினுதையம்புரிந்தவிஞ்சுகனகசபேசர்-செஞ்சிலம்பணியொளிர் குஞ்சிதத்தாண்மலரைக்(காண)

௩. தேடரியதிகழ்பாதமாடரவப் பூணணிந்து - வேடனுக்கருளிமூவர் பாடவேமனமகிழ்ந்து - நீடியசெஞ்சடையினுடியகங்கையுனைந்து-கூடியொளிர்நடராசராடியமலர்ப்பதத்தைக் காண (௩௧)

---

கீர்த்தனம்-இராகம்-ஆநந்தபைரவி- ஆதிதாளம்.

(பல்லவி.)

ஹரஹரசிவசிவநமச்சிவாயா- வெங்க-ளம்மைசிவகாமசவுந்தரிநேயா

அநுபல்லவி,

பரவுந்தொண்டருக்கன்பு - செய்யுஞ்சகாயா - நித்திய - பதம்பெறுசமயத்தினிதம்பரிவா - யிருந்து - மிதம்பெறவிளையாடுஞ்சிதம்பரதேவா ... ..... ... ... (ஹரஹரசிவசிவ)

[சரணங்கள்.]

க. தினமுந்நின்பதசேவைசேவிக்கவேணு - மிந்தத்-தெரிசனமேமோக்ஷ பலமெல்லாங்காணும்- நினைவெல்லாமந்தருபமாய்த்தோணு - மென்றும் - நித்தம்பலதேவலதகள்- சுற்றும்பலவிருந்தாலும் - வெற்றம்பலமல்லாது - சிற்றம்பலமாமோ... (ஹரஹர)

௨. யாவர்க்குமுயிர்க்குயிராயுறைந்தாயே - பரம - ரகசியமாகவெங் கும்நிறைந்தாயே - மூவர்க்குமுதல்வனுச்சிறந்தாயே - கருணை - மு கதா செகதக - நகவென நடமிடு-யுகதர வரடம - ருககரதரனே
[ஹராஹர

௩. பாதிமதியணிந்தபரஞ்சோதி - யன்பாய்ப்-பணியுந்தொண்டரு க்கெல்லா - மநுபூதி - ஆதியுமைபதிபாகிப்நீதி - மிகவு-மம்பரமா ண - திகம்பரரூப - பரம்பரமாண-சிதம்பரதேவா(ஹராஹர)சுய

—❧—

கீர்த்தநம் - இராகம் - மோகனம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

யார்க்குத்தெரியுமையா - சபாபதிநீ - ராடியவிந்தைதானையா... *

அநுபல்லவி,

தூக்கியபாதாதிரிசூலமுங்கையிலேந்தித் - தும்புரு நாரதர் கிம்பு ருடர் - கின்னரர் - சூழப்பொதுவி-லன்பர் - தாழவாடின விந்தை-யார்க்குத் ... ... ... ... ..... ..... *

[சரணங்கள்.]

௧, பாதச்சிலம்புமசைய - உமையாளிடப் - பாகத்திற் கூடியொசிய வேதகீதங்களும்நின் - றேதவேமமுவேந்தி - விடையைவிட்டிற ங்கிச் - சடையை விரித்துக்கொண்டு - வேணபார்த்து - வொரு தாளை தூக்கிக்கொண்ட .... ... ... (தார்க்குத்)

௨, குண்டலம்ரெண்டும்துலங்க - திருச்சடையிற் - குளிர்கங்கா- தே விகுலுங்க - பண்டுசுந்தரர்க்காகப்பரவைக்குத்தூதுசென்று - ப துமநல் - லழகிய - வதன - விழிசுமந்த-பாதம்நாகமற்-சாமவே தம்பாடிக்கொண்ட ... ... ... ... (தார்க்குத்)

௩, திருச்சிற்றம்பலம்வாழ்வோய் - பத்திவலையிற் செகந்துதித்திட வீழ்வாய் - தரித்தித்தித்தோந்திமி - திரித்தித்தித்திந்திமி - தகத கதரிகிடதிகிதிகிதிரிகிட தாத்திமியெனத் - திருக் - கூத்தாடியவி ந்தை ... ... ... ... ... யார்க்குத் (சுக)

கீர்த்தநம் - இராகம் - ஆநந்தபைரவி ஆதிதாளம்,

(பல்லவி,)

சுந்தரகுஞ்சிதபாதநிலைகண்டு - தொண்டுசெய்வாய்மனமே......*

அநுபல்லவி

சுந்தரந்தில்லைச் - சிவகாமிபங்கனுர் - தானந்தமாகிய
வாநந்தநாடகச் ... ... ... (சுந்தர)

[சரணங்கள்,]

௧, அச்சுதன்முன்னுளி - லேனமாகித்தேடு - மரக்கன்றலை-னொருங்
கிடச்சூடு - மெச்சியோர்பாம்பும் - புலியுங்கொண்டாடு-மேலாஞ்
சிதம்பரந் - தன்னினின்றுடுஞ் ... ... (சுந்தர)

௨, வெஞ்சினத்தெமனுயிரைமடிக்கும் - வீட்டின்பந்தத் - தெண்
ணந்தன்னைமுடிக்குஞ் - செஞ்சிலம்புங் - கிண்கிணியும்படிக்குஞ்
சிற்றம்பலத்தி-லெலன்றனும்நடிக்குஞ் ..... (சுந்தர)

௩, நல்லவர்செம்மை - மனத்தவர்போற்றும் - தம்புமடியார்- பிறவி
யைமாற்றுந் - தில்லைமூவாயிரர் - பூசைசெய்தேத்துந்- திருமால்
தன்கண்ணே-மலரெனச்சாத்துஞ் ... ... சுந்தர(௪௨)

---

கீர்த்தநம்-இராகம்-ஆநந்தபைரவி-அடதாளம்,
(பல்லவி,)

தூக்கியபாதத்தினைக்கொளிகண்டு-சும்மாயிருநெஞ்சமே

அநுபல்லவி,

தூக்கியபாதத்தைக்கண்டவர்க்கேசித்தி - சொன்னேன்சொன்னேன்
முக்காலுமேவெற்றி - தேக்குங்கருணைச்சிவகாமியேசத்தி - தில்லைச்
சிதம்பரங்கண்டவர்க்கேமுத்தி ... ... ... (தூக்கிய)

[சரணங்கள்,

௧, பாக்கியமான - பராபரங்காணும்- பார்ப்பதெல்லா-மதுமாகவே
தோனும் - வாக்குமனதுக் - கெட்டாததுபூணு - மன்றுள்நடன
முனகளுள்ளேகாணுந் ..... ... ... (தூக்கிய)

௨, பிறப்பிறப்பென்னுந் - துயர்போயொளிக்கும்- பேரின்பமான்
சுகமேயளிக்கும் - மறப்பும்நினைப்பு - மிலாதேமிளிர்க்கும் - மன
றுடையானருள் - கொண்டுதெளிர்க்குந் ... (தூக்கிய)

௩, தத்துவமெல்லாந் - தலைதடுமாறுந் - தானேநாமென - விடங்கண்
டுந்தறும் - அத்துவிதப்பொரு - ளாகியேவீறு - மாநந்தவின்ப-
வமிர்தமுள்ளூறுந் ... ..... ... தூக்கிய(௪௩)

கீர்த்தநம்- இராகம்-கலியாணி- ஆதிதாளம்.

பல்லவி.

சிவந்தபாதத்தைக்காணவேணுமென்று -சிந்தையினினைமனமே...*

அநு பல்லவி.

தவர்தனக்குப்பயன்- தருவோமெனத்தில்லைச் -சபையி
னடனமிடுந்தாண்டவராயன் ..... (சிவந்த)

[சரணங்கள்.]

க. அம்பரத்தினின் றமரர்கோன் முநிவர்க்கு - மாறுசமயவேதசாஸ்
திரத்தலைவர்க்கும் - உம்பருக்குமுய - ரிருடிகட்குமுலகி- லுள்ள
பேர்களுக்கு-மோமென்றுடிச் ..... ..... (சிவந்த)

உ. பதஞ்சலிபகவற்கும் வியாக்கிரபாதத்கும் - பலநாளும் நடஞ்
செய்தபாதங்காண்பதற்கு - நிதமுமவனருளினாலே துதிக்குமன்
பர்-நினைவிலுங்கனவிலும் நின்றுநடம்புரிந்து ..... (சிவந்த)

ங. காளியுடனேகூடி வாதாடினவிந்தை - கண்டதில்லைக்காதாற்கே
ட்டதுண்டிப்போது - தூளியுடம்பிற் பூசிமானுமழுவுமேந்தித்
தொந்தோமென்றொருகாலைத் தூக்கிநின்றுடிச் ...சிவந்த(ருஅ)

---

கீர்த்தனம்-இராகம்-பந்துவராளி- ஆதிதாளம்.

(பல்லவி.)

அவனேதேவர்கள்கண்ட - வவனேதேவர்கள்தலைவ
னவனைத்தினமுநினை ... (மனமே)

அநுபல்லவி.

தவநேசர்பணி சிதம்பரவாச - னெளிருஞ்சிற் - சபை
நடராஜனெவனோவவனெவனோ ... (அவனே)

[சரணங்கள்,]

க. இகலாதியேகனேகனென்றேதிசமு - மெழிலானஜோதி யெவ
னோ - புகலாதிபூமியான்மாபந்தபாசபரி - பூரணமானதேவனோ
சகலாதியெயர்சராசரமாகியேநின்ற - சம்புநாதனெவனோ- அக
லாதியமரருக்காதாரமாந்தெய்வ - மாமஹாதேவனெவனோ - வவ
னெவனோ .... ..... ... (அவனேதேவர்கள்)

உ. உருவாலுமருவாலுமுருவருவதினாலு - மொளிரும்பிர்ம்ம மெவ
னோ - விரிவாலுமுயர்வாலு மெவ்வுயிர்க்கு முயிராய் - விளங்கிய

மெய்யனெவனோ - ஒருநாலு மறையாலு முடிக்கலே களினுவ்
மோதொணுநாதமெவனோ - அரியாலுமயனாலு மடிமுடியறியா
த வாதிமுன்ஞதியெவனோ-வவனெவனோ ..... (அவனே)

௩. பேரானவரிசிரமேறிப்பிளந்திடும்பெரியதாணுமெவனோ -நேரா
ணபங்கயன்சிரமதைகிள்ளிடும் நிமலனமலனெவனோ - ஏரானமத
னேமுன்னுதலின்விழியினு லெரித்தபகவனெவனோ - சீராபுலியூ
ரிற்சிவகாமிபங்கனுஞ் சிற்சபாபதியெவனே- வவனெவனோ. அவ

கீர்த்தநம்-இராகம்- புன்னுகவராளி - ஆதிதாளம்.

பல்லவி,

மறவாதிருநெஞ்சமே - உனக்கிது - பிறவாமருந்தாமே.

அநுபல்லவி,

நறுமாமலர்ப்பொழில்-சூழ்தில்லையம்பல-நாதர்குஞ்சிதச்
செம்பொற்பாதமிமைப்பொழுதும் (மறவாதிரு)

[சரணங்கள்,]

௧. நிச்சயமாகவேகேளாயஞ்செழுத்துண்டு -நிற்கும்நிலையையறிந்து
ச்சரித்துக்கொண்டு - வைச்சவழியேசென்று அச்சமறவேகண்டு-
மன்றுளானந்தநடமின்றேகண்டுகொளென்றும்............(மற)

௨. பழையவடியார்திருவடியில் வீழ்ந்தெழுந்து - பணிசெய்யவே
யவரிரங்கிமனமகிழ்ந்து - பிழைவாராமற்காத்துத்திருவடிநீழலீ
ற்-பிசகாதிருக்கவைப்பா ரசையாய்நீயெப்போதும் ...... (மறவா)

௩. தினவாரமுந்திருமூலத்தாநமேசென்று - தெரிசநஞ்செய்சிவகா
மிசந்நிதிகண்டு - அனவரதமுஞ்செம்பொ னம்பலத்தாடிய - வ
ம்மையப்பர்பொற்றுள் செம்மையாகக்கண்டு... ... மறவா(சசு)

கீர்த்தநம்-இராகம்- முகாரி-ஆதிதாளம்.

பல்லவி,

சிவனே மறவாதே நினை மனமே - ஒருக்காலுஞ்சிவ
னை மறவாதே நினை மனமே ... *

[சரணங்கள்.]

அவனியுடன்பகிரண்டங்களையுமளித் தாண்டவனைத்
தாண்டவனையாசம்பலத்தானைச் ... (சிவனை)

[சரணங்கள்.]

௪ - நடவாதநடக்கை நடந்தாலுங்கூடி - யடையாதகொடியகலி ய
ரவுதொடர்ந்தாலும் - படையாளர்சுற்று மடர்ந்தாலும் - மாதர்-
கடைமனைதோறும் நிதங் காத்துக்கிடந்தாலுஞ் ...... .....(சிவனே)

௨. பெண்ணாசைவந்துபிடித்தாலும் நம்மை - பெண்ணுமலேயொ
ருவரோசியடித்தாலும்- புண்ணாகிமனது துடித்தாலும்மாய்ந்து- க
ண்ணாசிசெவிமூடிக் கால்கள் துடித்தாலுஞ் ..... (சிவனே)

௩. வாரியளறுயுறைந்திட்டாலும் பொன்னும் - மேருகிரிவீறுபட
வின்னுடைபட்டாலும் - பாருலகவாழ்வதுகெட்டாலு மூந்த-
யாருமறியாதபழி யாம்வினைதொட்டாலுஞ் ... (சிவனே)

௪. அரீபிரமர்பதங்களழிந்தாலுமின்னு - மிருசுடருமாதியெதிரே
றிமிழிந்தாலும் - வருணனும்மண்மாரிபொழிந்தாலும்நாளுந்-த
ருமநெறிபகருமறைதவறிமொழிந்தாலுஞ் ... (சிவனே)

௫. மருமலர்களணிமமம்பரனைத்தேவ - தருவாகிக்கதியின்பர்தருங்
குருபரனை - உருவாகிவருந்திகம்பரனை நீலத்-திருவுடனே நடன
மிடுஞ் சிதம்பரேஸ்வரனை ... ..... சிவனே(சுள)

---

கீர்த்தநம்-இராகம்-முகாரி- ஆதிதாளம்,

பல்லவி.

பேசாதேநெஞ்சே-பேசாதே ..... .... *

அநுபல்லவி,

பேசாதேநெஞ்சேபின்சொல்லிப்பேசியுந்தாளென்னகண்டாய் *
நசர்புலியூரில்வளர்நேசரநுபூதியல்லாற் ... (பேசாதே)

[சரணங்கள்,]

௧, சிங்காரவிடைபிங்கலே - சங்காரவழிபோகாமற் - பொங்கமாகவே
திறுத்தி-யெங்கள்குருராயர்-பாதமேத்திக்கோ- மனதைத் - தேற்
றிக்கோ - வருளைக்காத்துக்கோ - வஞ்செழுத்தையும் - போற்றிக்
கோ-நமனென்றசத்தம் ... .... (பேசாதே)

௨. ஆமையாமையந்துறப்பையு - மூமையெழுத்துள்விருத்திச் சோ
மசேகரன்பதத்தை - நாமெனக்கருத்துள்வைத்து - நாடிக்கோ-
பொருளைத்தேடிக்கோ - முத்திவழியைக்கூடிக்கோ-வாநந்தக்கூ
த்தாடிக்கோ-நாமென்றசலதம் ... (பேசாதே)

௩, பட்டிப்பசுக்களைநீதுண்டு - கொட்டிலிலடைத்துக்கொண்டு - எட்டெழுத்தருவையுண்டு - பொட்டெனச்செபத்திற்றெண்டு- பூண்டுக்ககா-வருளை - யின்றுக்கோ - நமது - ஆண்டவன் - தில்லையம்பலத்-தாண்டவன்-தன்னைநீகண்டாற் ...பேசாதே(சஅ)

---

கீர்த்தநம்-இராகம்-நாதநாமக்கிரியை - ஆதிதாளம்

பல்லவி.

சிதம்பரமே நினைமநமே ஜென்மமீடேறச்
சிதம்பரமே நினைமநமே ... *

அநுபல்லவி,

சிதம்பரமேமுத்தி - சின்மயமாகிய - பதஞ்சலிபூ
சித்த - பாதனைக்காணச் ... (சிதம்பரமே)

[சரணங்கள்,]

௧, ஆகமவேத புராண வுல்லாச - சிவோக மஹேச நடேசனைக் காணச்.................................(சிதம்பரமே)

௨. தக்கிட திக்கிட தரிகிடவெனவே - திக்குநடனமிடுந் தேவனைக் காணச்.................................(சிதம்பரமே)

௩, திந்திமிதிமிதிமி திமிதிமியெனவே - விந்தைநடனமிடும் வேதனைக்காணச்.................................(சிதம்பரமே)

௪, சந்தனலேபன சம்பிரமலாலித - கந்தவசந்தவை போகனைக் காணச் ..... ... ... (சிதம்பரமே)

௫, பத்தியருட்சிவ காமசௌந்தரி - முத்திதரும்பரா சத்தியைக் காணச் ... ... .... ..... (சிதம்பரமே)

௬, தரணியிலனைவருந்தமியொடுதுதிசெய - மிரணியவன்மவினோதனைக்காணச் ... ... ... (சிதம்பரமே)

௭, தேவர்தொழுந்திரு மாலயன்தேடு - மூவாயிரர்பூஜித்த மூர்த்தியைக்காணச் ... ..... சிதம்பரமே(சக)

---

கீர்த்தநம் இராகம் -மங்களகௌசிகை ஆதிதாளம்.

பல்லவி,

தெரிசனமேநினைமனமே - சபாநாதர் - தெரிசனமேநினைமனமே

அநுபல்லவி,

தெரிசனமேமுத்திபரிசனமேநித்யவரிசை நடனம்புரிவாஞ்சபைவாணர் ... ... ... (தெரிசனமே)

௧. கஞ்சமலருதயன் - கஞ்சவனிதைபதி - கஞ்சநயனன்பணி - கஞ்ச
மலர்த்தாள் ... ..... .... .... .... (தெரிசனமே)
௨. ஆகமத்துட்பொரு - ளாகநிறைந்தசு - தாகரமகிமைகோ - ள்ளாகா
சலிங்கர் ..... ..... ... ... ...(தெரிசனமே)
௩. கனகாம்பரதர் - கனகசடாதர - கனகசுடாகர் - கனகசபேசர் -
தெரிசனமேநினைமனமே... ... ... (௸)

—→※※←—

கீர்த்தநம்-இராகம்-கலியாணி-ஏகதாளம்,

பல்லவி.

தோத்திரஞ்செய்மனமேஉனக்கிது - மாத்திரமுற்பனமே *

அநுபல்லவி.

காத்தெமையாளும்வென்ன ணீற்றனைவார்சடை - யாற்றனை
யாநந்தக்கூத்தனையநுதினம் ... ... (..தோத்திரஞ்)

(சரணங்கள்.)

௧. ஈசனைக்கனகசபேசனைஞானப்பிர - காசனையோர்சொல்லும்வாச
னைபதஞ்சலி - பூசனைசெயுஞ்சருவேசனைக்கயிலாச - வாசனைத்தி
ருநடராஜனையரனைத் .. ... .... ...(தோத்திரஞ்)
௨. பாணனையாண்டநஞ்சுணனைவாசுகி - நாணனையக்கினிப்பூண
னைமால்தேடுஞ் - சேணனைநித்திய கல்யாணனைமுத்திநிர் - வாண
னையம்பலவாணனையரனைத்... ... ... (தோத்திரஞ்)
௩. வேளனைமுண்டகத்தாளனைவீறுங்கங் - காளனைவிபூதித்தூள
னைப்பாம்பணி - தோளனையடியவர்க் காளனையாதிரை - நாளனை
யுமைமணவாளனையரனைத்... ... ...(தோத்திரஞ்(௸)

கீர்த்தநம் - இராகம் - பந்துவராளி - ஏகதாளம்.

பல்லவி.

நிர்த்தமிடுந்திருச் சிற்றம்பலவனை நித்தம்நினைமனமே

அநுபல்லவி,

வித்தைவருமுயர் புத்திவருஞ்செல்வ - மெத்தவருமொன்று
மொத்துவரும்மன்றுள் .... ..... ..... (நிர்த்தமிடுந்)

[சரணங்கள்,]

௧, செந்திருமாலயனிந்திரன்மாதவர் - செய்யமுநிவர் - செயசெய
வென்றிடத் - தந்திரமாயொருகாலைத்தூக்கிக் காளிமுன் - தாஞ்
தோதிமி திந்திமிதாவென... ..... ... ......(நிர்த்த)

உ, சகலபுவனத்தவரவர்போற்றிடச் - சந்திராதித்தர்கள்தாமுந்து தித்திடச் - செகணதோதிமிதிமிதத்திமிதிமி - திகுததாகுதாகு திக்கிடதத்தியென... ... ... ... ... ...(நிர்த்த)
ரு, அந்தமுள்ளமாலேசொந்தசௌவுந்தரி - யானசிவகாமியம்மை மகிழ்ந்திடத் - தந்திதனுதனதானதானதன - தக்குதிக்குடிகுதள ங்குதாவென... ... ... ... (நிர்த்தமிடுந்(குஉ)

---

கீர்த்தநம் - இராகம் - நாகவராளி - ஆதிதாளம்,

பல்லவி,

தேடித்திரியாதேநெஞ்சே ... ... தேடித்திரியாதே

அநுபல்லவி,

தேடித்திருந்துதிகையாதேநெஞ்சே சிற்றின்பத்தாலே
ஜெகமெல்லாம்பஞ்சே... ... ... (தேடித்திரியாதே)

[சரணங்கள்,]

க, நானென்றவாணவந் தன்னை ய நீக்கு - நாதாந்தப்பேரொளித ன்னிமேலதாக்கு - மோனமாமந்திரத்துண்மையைநோக்கு - முத் திக்குவித்தாய்முழுமதியாக்குத்... ... ... ...(தேடித்)
உ, ஆத்துமஞானிக்குமெய்தனிற் சொட்டு - வண்டரண்டபகிரண் டங்கள்விட்டு - பேரானவானந்தவெள்ளத்தையெட்டிப் - பேச் சுனையற்றஇடந்தனைக்கிட்டு ... ... ... (தேடித்)
ரு, போட்டவிடத்திற்பொருள்தனைத்தேடு - போதநிஷ்டையுட் புகுந்துநீயாடு - நாட்டமுடன்சற்குருபாதந்தேடு - நாலாம்ப தத்திலருள்ஞானவீடு... ... ... ... (தேடித்(குரு)

---

கீர்த்தநம் - இராகம் - நாதநாமக்கிரியை - ஏகதாளம்.

பல்லவி,

கண்டாயோமனமே - நாடேசனைக் - கண்டாயோமனமே,

அநுபல்லவி,

அண்டமுழுதும்பிர்ம்மமென்று... ... ... தோன்றலீலை
கொண்டவஸ்துவாய்வந்த... ...பண்டரீகபுரத்தைக் (கண்டாயோ)

சரணங்கள்,

க, தொந்திப்புநீங்கினேயே - மெஞ்ஞானத்தின் - சந்திப்புவாங்கி னேயே - செந்திப்பிரளயகன்ம - மென்றுபகலிரவா யந்தக்கரண மே - யாதந்தக்கட லுருகி... ... ... ...(கண்டாயோ)

௨. சத்துவக்குணம்பகுந்தாய் - ரஜோதமங் - அற்றகுணமிகுந்தாய்-செச்தகயிறு சனிற் புற்றுப்பாப்புப்பிரமை - யுத்துத்தெளிந்து மகிழ் பெற்றதிரள்பேரின்பங் .... ...(கண்டாயோ)

௩. இன்பந்தெளிந்துகண்டா - யசேதன - வெப்பசிதீர்ந்துகொண்டாய்- அன்புக்கினியதோர்சிதம்பரந்தனில்லை - நடம்புரிந்தருடரு மம்பலவாணனைக் ... ... (கண்டாயோ(௫௪)

---

கீர்த்தநம்-இராகம்-சாவேரி- சாபுதாளம்.

பல்லவி,

சிவசிதம்பரமே தெரிசிக்கமனமே ஜெனனமில்லை யிதுநிசமே

அநுபல்லவி.

தவசிகட்குநடஞ்செய்-சம்போசங்கரசிவ .... .... *
பவநாசபுனித-பஞ்சாக்ஷரரூபர்வாழ் ..... (சிவசிதம்)

( சரணங்கள் )

௧.பரவும்பதஞ்சலி - வியாக்கிரபாதரோடும் - பார்த்தவர்க்கெல்லாம் -பிர்ம்மாநந்தமேமூடும் - அரியுமயனு - மயங்கியேதேடு மாதியந்தமில்லா-வமலன்நின்றாடுஞ் ... ..... ..... (சிவசித)

௨. மங்களவேள்வியு - மாதவர்பூஜையு - மருவியவாகம - வேதத்தினோசையுந் - தங்கமத்தளதாள-சங்கீதவோசையுந் - துலங்குமெய்யடியுரீர் - துதியோசையும்வளர் ... ... (சிவசித)

௩. வல்லவர்வாசஞ்செய் - தில்லையுள்தொண்டு - மகிழ்ந்துசெய்வார் பதஞ் - சென்னிமேற்கொண்டு - வல்லும்பகலும் பேரின்பத்தையுண்டு-ஆநந்தநிர்த்தநடேசனைக்கண்டு ... சிவசித(௫௫)

---

கீர்த்தநம்-இராகம் முகாரி-சாபுதாளம்.

( பல்லவி. )

கெட்டுப்போகாதே நெஞ்சே... ...யநியாயமாய்க்
கேட்டுப்போகாதே - நெஞ்சே............ ...... *

அநுபல்லவி.

சிட்டர்தொழுந்தில்லைச் சிதம்பரந்தனில்வாழுஞ் ........*
சிவனே சிவனே சிவனேயென்றுருகுநீ...... ......(கெட்டுப்)

(சரணங்கள்.)

௧. ஆசாபாசத்தைத்துரத்து - உனக் - கதிலுண்டோ சொல்வரத்து - பேசாவனுபூதி - பிறவிக்கழிவுத்தடும் - பெருமான் பெரு

மான் பெருமானென்றுருகுநீ ... .... (கெட்டுப்)

உ. விழவுக்குழுத்துலேபோட்டு - சும்மா - வீணுக்கிறைத்தசெதன் பலன்காட்டு - பழகப்பழக அந்தப் - பழமூனக்குருசிக்கும் - ப ரமன பரமேன பரனேயென்றுருகுநீ ... ... (கெட்டுப்)

ங சஞ்சலமேதனக்கடங்கு - குரு - சாமிபாதம்பணியத்தொடங்கு வஞ்சகமேவேண்டா - மன்னன்பொன்னம்பலவரதா - வரதாவர தாவென்றுருகுநீ ... ... ... (கெட்டுப்(௬௬)

---

கீர்த்தநம்-இராகம்-காம்போதி-ஜம்பைதாளம்,

(பல்லவி,)

இனிச்சுமக்கமுடியாது-தேகம்-இல்லை ... ... *

[அநுபல்லவி]

வனத்துறையுஞ்சிவகாம வல்லியுமைபாக ... .. (இனிச்)

(சரணங்கள்.)

க, மலத்திருல்விளைந்தபழுக்கூடு - துன்ப -வாரியைப்புலவேடர்வா ழும்பெருங்காடு சலத்துளியாமேலிந்தவீடு - இருமை - தளைத்த லெனுஞ்சனனத்தனையெடுத்துப்போடு ... ..... (இனிச்)

உ, ஒருநாலுபேர்சுமக்குமூட்டை - நா - னொருவனேசுமப்ப - னிந் தவுடன்மாய்க்கூட்டை - மருவிலாப்பழங்காயக்கோட்டை - கன் ன-வாசலொன்பதாகியே வரும்பழையவீட்டை ... ... (இனிச்)

ங, வருவாசலூரனையுங்காத்தீர் - இரண்ய - வன்மனுக்குத்தனதாகம் வரவேநீர்பார்த்தீர் - திருநாளைப்போவானையுஞ்சேர்த்தீர் - நா ளுஞ் சிற்சபையிலாநந்தத்தெரிசனந்தந்தேற்றீர்........(இனிச்)

ச, வருவதென்றுமலர்க்கொன்றைதாரும் - வந்துவாழாதுவாழுமிந் தமலமபக்கந்திருந் - திருவருளால்நோக்கியென்னைப் பாரும் பா ர்த்துச்-சித்தமகிழ்ந்தாநந்தத்-தென்மதுரைச்சேரும் (இனி(௬௭)

---

கீர்த்தநம்-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி,

இன்னம்பிறவாமலேயாளாய் ... கேளாய்*

அநுபல்லவி,

பொன்னம்பலவாணு-வாகா-பூமதனைவென்றயோகா-நிரந்தரமும் எமசபையில்வைபாகா -புலியூர்சிவகாமவல்லியுமைபாகா(இன்)

[சரணங்கள். ]

௧. காய்மேநிலையென் -றெண்ணி-தீயபாவமே-பண்ணி -மாயநரகை-நண்ணி - வருந்தவேமுடியாது பாவஞ்செய்யாம - லிருந்தகலவு மொன்றுதவஞ்செய்தாலு-மிருந்தஜனனமும்போதும்(இன்)

௨- தொல்லைப்ப்ர்ச்சனனத்-தாலே-அலைவாய்த்துரும்பு போல நிலையாச் சுழலிப்-பேயமேலே நின்மனதருளைநாட்டி - யகலாத கன்மவினைகளை விட்டோட்டி யழிவில்லாத-இன்மபவழிகாட்டி ... ... ......(இன்)

௩. நின்னருளினாலே-வந்தேன்-சந்நிதிதனை-யடைந்தேன் முன்னம்வி னையைத்-துறந்தேன்-மூண்டகடுவுண்டதூயா, வணங்கினோ - யா ண்டருளும்வெகுநேயா-கனகசபைத்-தாண்டவராயா[இன் (ருஅ)

——⁂——

கீர்த்தநம்-இராகம்-ஆகிரி-ஆதிதாளம்.

(பல்லவி.)

கலந்துகொள்வேனே-இனிநான்-கலந்துகொள்வேனே ............*

அநுபல்லவி.

கலந்துகொள்வேன்-தில்லையம்பலந்தன்னிலே .. ......*
காரணங்கடந்த-பூரணத்துடனே ... ... ....... ... (கலந்து)

[சரணங்கள்,]

௧. கூற்றுவனுகத்தொடருமிருமைக் கொடியவினைகளடியோடகன்ற து-சாற்றும்பெரியபுவனமெல்லாங்கொண்டு - தானதுவானதுநா னதுவாகக் ..................... ... ... ......(கலந்துகொள்வேனே)

௨. கட்டுரைகேளாதவன்மனமியான்வைத்த-காவலிற்றங்கியென்னேவ லாளரியது-தொட்டுமறித்திங்கெனைத்தடுப்பாரெவர் -சொல்லற்கரி யதோர்நல்லவுறவினிற்................ ......(கலந்துகொள்வேனே)

௩, செங்கோட்கடவுட்பதமுமயானமுஞ் -செய்யகமலத்தோன்கையு ஞ்சலித்தது நங்குருநாதன்குறியும்நிலைத்தது-நம்பலமானபேரம் பலச்சோதியில்.........................(கலந்துகொள்வேனே(ருகூ)

——⁂——

கீர்த்தநம்-இராகம்-ஆரபி-ஏகதாளம்.

பல்லவி,

மாணிக்கவாசகர்பேறெனக்குத்தரவல்லையோவறியேன்............ ௮

அநுபல்லவி.

காணிக்கையாகக்கொடுத்தே னுனக்கென்னை
யாணிப்பொன்னே தில்லையம்பலவாணு(மாணிக்)

[சரணங்கள்.]

௧. நோயும்வறுமையுஞ் சண்டையிடாதே-நோக்கனைநோக்காகநோக்கிவிடாதே-தாயுங்கமருஞ்சலித்துவிடாதே- சந்தியில்வையாதே-ஆயுமிளம்பிறை சூடியமூர்த்தி-யத்துவிதமுத்தி-புத்தியளித்துத்தீயமறுமை - யெதிர்நின்றதள்ளுஞ் சிற்சபைமந்திர - சிதம்பரதேவா.......................................... (மாணிக்கவாசகர்)

௨. கட்டிலைவிட்டுக்-கிடத்துமென்றுதே -காலைத்கரங்களைக்-கட்டுமென்றுதே-கொட்டிமுழக்கிட்டுககூகூவென்றுதே - கோரணிகொள்ளாதே-எட்டியொருவர்புலம்பிவராதே யேழைப்பிணத்தை யெடுமென்றிடாதே சிட்டர்தொழுந்திருக் கட்டளைமேவுஞ் சிதம்பரதேவா-திருநடராயா......... .. .................(மாணிக்கவாசகர்)

௩. கட்டையின்மேல்வைத்துச்-சுட்டுவிடாதே-கள்ளக்குழியிற் புதைத்துவிடாதே-பட்டும்பணியுந்தரித்தயலோர்வந்து பாலள்ளிக்குத்தாதே-கிட்டியொருவர்-சடங்குசெய்யாதே - கேட்டவரெல்லாங் கிடைக்கத்தருமென்னச்-சிட்டிப்பவன்பணிசிற்சபைமேவுஞ் - சின்மயரூப-சிதம்பரநாதா ... ................... (மாணிக்கவாசகர்)

௪. அப்பரும்லிங்கத்-தடைந்தனரொன்று-மாரூரர்வெண்க மேறினரொன்றுஞ்-செப்பரியதிருஞானசம்பந்தர்-மாதசுடன்சென்றுமொன்றும்-இப்படியென்னை-யலைத்துவிடாதே எம்மானிருந்த-படியேவிருந்திடச்-செப்பவருவீர் நடம்புரிமேவுஞ்சிதம்பரதேவா சிவகாமிநேயா ....... ... .. ... ......... ... ...... (மணிக்கவாசகர்)

௫. சிற்பரதற்பர மெய்ப்பொருளுங்கண்ட-சித்தரெல்லாரும் நிறைத்துதெரிசிக்கத்-தற்பதமாம்நாலாஞ் சத்திநிபாதமுஞ்-சாயுச்சியமும்பெறவே-பொற்பூமாரியிமையோர் - சொரிந்திடப்-பொன்னூசலாடுந்-திருவாதிரைநாளிற்-கற்பூரதீபம்போ-லென்றனுடலைக்கனகசபையிற் -கலந்துக்கொள்வாய்ய - மாணிக்கவாசகர்போனக்குத்தரவல்லயோவறியேன்....................................(௬௰)







திருச் சிற்றம்பலம்,

சபாநாதர் துணை.

# முத்துத்தாண்டவர்பதம்.

பதம்-இராகப்-கலியாணி-ஆதிதாளம்,

பலலவி,

வருவார்வருவா ரென்றன் மனதைத் தேற்றுவாரல்லால்
வந்தாரென்பாரைக் ... ... காண்கிலேன்

அநுபல்லவி,

தெருவிற்றும்வாசற்றுந் ... ..திரிவார்சகிமாரெல்லாந்
தில்லாபுரீசர்முன்போய்நில்லாரென்காதலசொல்லார்... (வரு)

[சரணங்கள்]

௧. நிலவிதுலாவச்சொல்வார் - சலவைபன்னீரிறைப்பார் - கலவிக்கு
மேனைமயன் பார்-மலர்மெத்தையிதுவென்பார் - சலமோவிதுசி
நேகப் - பலமேநானேதுசெய்ய- உலகாளுந்தில்லையீச -ருலவி
யென்னையணைய ... ... ... (வருவார்)

௨. நாமறியோமோசாமி - தாமதஞ்செய்வாரோ - நீமயங்காதே
யென்று - பூமலேற்றவறிவார் -காமனூர்வந்தாலென்ன - சோமனூர்
வந்தாலென்ன - பூமலர்வாடுமுன்னே - யேமசபேசரென்முன்-
(வருவார்)

௩. கங்கைசடையிலாடச் - செங்கையிற்றுடியாடப் - பங்கயமெனுங்
கைகொண் - மங்கையர்கள்கொண்டாட - நங்கைசிவகாமி - கொங்
கைசேர்புயமாட - செங்கைவீசியாடச் - சதங்கைபாதத்திலாட-
(வருவார்)

---

பதம் - இராகம் நாதநாமக்கிரியை-ஏகதாளம்,

பல்லவி,

தேனூர்மொழிமானுள் ... தன்னைச்சேரீர்மயல்தீர்

அநுபல்லவி,

மானூர்கரனேயம்பலவாணுடணிபூண ..... (தேனூர்மொழி)

[சரணங்கள்.]

௧, அளகமதுசரியமூக - மலரவளைநெரியக் - களபமுலைபுளகமெழுக் - கலவிசெய்பத்தருணம் - வளமைபெறுமக்குமாலிகை மார்பாவதிரூபா-களமார்விடமுணுதில்லைக்-கனகசபைவாணு (தேனூர்)

௨, அன்னைதான்வசைபேசவே - துணை - யானமாதருமேச்சவே-கன்னல்மாமதனெய்பவே - மலர்க் - கையிற்கங்கணந்தொய்யவே. என்னதான்செய்வாள்சொல்லீர்-மய-லெளிதல்லவேறில்லீர் - மன்னுசுந்தரர்தூதா - தில்லை - மன்றுளாடியபாதா(தேனூர்மொழி)

௩, சந்தனஞ்சுடுமென்பள்-மனந்-தகைத்தாற்பகையென்பள் - அந்தியுந்தணலென்ப - ளொருவல்லுநூறுகமென்பள் - கொந்தார்கொன்றைத்தாமா - நறுங் - கோதையம்பிகைவாமா - இந்திரன்றிருமாலன் - ரெழு - மீசா நடராஜா... .. தேனூர்மொழி (உ)

---

பதம் இராகம் ஆஷிடகன்னடம் -ஏகதாளம்,

(பல்லவி.)

பேசவுமெண்ணுதகோபமேதோ ... தென்புலியூர்

அநுபல்லவி,

ஈசரேயுமக்கு நாணுகாதோ

[சரணங்கள்,]

௧, வருந்திநானழைக்கவுமாச்சோ - உம்முடன் - பொருந்தாதவென்னைச்சேர்ந்தாலேச்சோ - இருந்தவிடமெல்லாமவள்பேச்சோ-வவள்கையின் - மருந்துதான்தலைக்கேறிப்போச்சோ (பேசவும்)

௨, மாதர்வசையாலேமனம்நோமோ - வென்னைத்தள்ள - நீதமோ பெண்பழிவீணேபோமோ - காதலரியாதவர்நீர்தாமோ - சுந்தரனூர்-தூதரோயிப்படிசெய்பலாமோ.................. ...(பேசவும்)

௩, கொந்தலரமளியிற்சேர்ந்தீரோ - சேர்ந்தணைந்து- சந்ததம்நீங்காமயல்தந்தீரோ - அந்தமின்னார்தம்மைநினைந்தீரோ - சிவகாமசுந்தரியாகரோமறந்தீரோ ... ...... ..... பேசவும்(௩)

---

பதம் - இராகம் - கலியாணி - அடதாளம்.

பல்வி,

அப்படியிப்படிசெய்ததற்கொப்பினேன்... ... ..... ...*

தப்பிதமோதில்லைத்தாண்டவராயா ................ .........*

அநுபல்லவி.

பொற்படியேகொடுத்தெப்படியாகிலும் - - *
மெய்ப்புடன்வந்தென்னையொப்புடன்கூடநீர் (அப்படி) *

(சரணங்கள்,)

௧, வாலையிலேதந்தச் சேலையிலே முத்து மாலையிலேபொன்னோலையிலேசெய்த- வேலையிலேயந்திமாலையிலேதென்னஞ்சோலையிலே காமலீலையிலே நீர் - - - - (அப்படி)

௨, மேடையிலேமலர் சூடையிலேவிளை யாடையிலேயுற வாடையிலேநீ - ராடையிலேயென்னைக்கூடையிலே மூத்தாடையிலேகை போடையிலே நீர் - - - (அப்படி)

௩, நாளையிலே யென்னை யாளையிலே சொந்தக் - காளையிலேறிக்ய வாளையிலே - யிந்த-வேளையிலே நல்ல நாளையிலே கர்ப்பக்கோளையிலே யாசை மீளையிலே நீர் - - அப்படி(௪)

---

பதம்-இராகம்-கலியாணி ஏகதாளம்.

பல்லவி,

சரசமிப்படிசெய்யலாமோ - சாமிநீ - சரசமிப்படிசெய்யலாமோ

அநுபல்லவி,

வரிசைபெறும்விநோதரே-வளர்சிதம்பரநாதரே - (சரச)

(சரணங்கள்)

௧, முலையிலேகையைபோடுறீர் - முகத்திலேமுத்தம்நாடுறீர் - தலையிலேமலர்சூடுறீர் - தழுவியேவிளையாடுறீர் - (சரச)

௨, மானமுறுமெங்கள்குலத்திலே - மாதர்வருமின்ப நலத்திலே- ஞானமுறுஞ்சிவஸ்தலத்திலே - நாகரீகபொன்னம்பலத்திலே-

௩, வேதந்துதித்திடும்நீதரே- மிகுந்திடும்பிரக்கியாதரோ - ஓதவருந்தில்லைவாதரே-யுயர்சிதம்பரநாதரே - சரசமிப்படி (௫)

---

பதம் - இராகம் - சாவேரி - திரிபுடைதாளம்.

பல்லவி,

வேண்டாமிதெல்லாங்காரியமல்ல-தீண்டாதேநில்லும்

அநுபல்லவி,

வேண்டாமிதெல்லாங்காரியமல்லதீண்டாதேநில்லுந் தாய்தமர் கண்டால் - ஆண்டவனொன்றும்பயப்படார்தில்லைத்தாண்டவராயமா - வே

(சரணங்கள்,)

௧, ராவிலேவந்தென்னைமல்லிகைப் - பூவினாலேயெறிந்துசருவித் தாவிமடியைப்பிடித்துப் பண்ணுகசரசமேபண்ணுநீர் - கோவி லில்லாசவூரோ - வையோ- பாவியேன்பக்ஷம்-யார்சொல்வார்கள்- சேவிலேறும்நீதரோ சிருத்தில்லைநாதரோ - (வேண்)

௨ ஆருமில்லாவிடத்திற்பிடித்தாற் சேருவாளென்று பார்க்கிறீ- ரந்தத் - தாருகாவனத்துமாதர்போலல்லசமர்த்திநானையா- ஊரு மூலகுமறியச்சேலைதாருமிறவும்பகலும் - வீட்டில் - வாருங்கூடி யணையலாஞ்செம்பொன்மன்றுளீசரோ - (வேண்)

௩, இன்றுநீனிப்பாளென் றெண்ணுமன் முன்னுளுறவா யிருந்தவளா ட்போற் - பின்னாலேவந்துகழுவினாற்கண்டபேரென்னசொல்வார் சொன்னாலுஞ்சற்றுபதிகிறீ - ரில்லை - முன்னாலறிந்தவர்வருகிறார்- பாரும் - பொன்னுடர்பணிகயிலைவாசரோபுலியூரீசரோ வேண் (௩)

---

பதம்-இராகம்-நீலாம்புரி ஜம்பைதாளம்.

பல்லவி.

அழைத்துவாபோடியடிமானே - இன்பந்

அநுபல்லவி.

தழைத்தபுலியூரிற்றாண்டவனைத்தாமே - (அழைத்து)

(சரணங்கள்.)

௧. அன்னநடையின்னேயெனிவ்வன்ம - மென்னை - யன்னையென்று ம்பாருன்றன்தன்மம் - சொன்னேனுமொரு வார்த்தைகன்மம்- நாளுஞ் - சுகமுறவேமருவாதஜென்மமென்னஜென்மம் (அழை)

௨. செம்பொன்மலரின்பமுடன்சூடி - யுயர் - செம்பவளவாயாவி யைபாடிக் - கும்பமெனுமிருதனத்தைநாடி - யென்னைக் கூடிய வர்போனவிடந்தேடியுறவாடி - - - (அழை)

௩. தில்லைவனந்தனிலிருக்குமீசர் - எங்கள் - சிவகாமவல்லியுடன்பிரி யாதநேசர் - அல்லலறுத்தாண்டருள்பிரகாசர் - இப்போ - தன்ன மேநீசொன்னால்வருவாரென்பிராணேசர் - (அழை(எ)

---

பதம்-இராகம் எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

ஆசைதீரவேயென்னை யணைந்தாலொண்ணுதோ *

அநுபல்லவி,

பூசைபுரியுந்தில்லை-ஈசாசபைநடேசா - - (ஆசை)

(சரணங்கள்,)

க, சந்திரனைக்கண்டு நீல மந்தரங்கமானதுபோல் - எந்தன்மீதிற் பட்சம்வைத்துவந்தாலொண்ணுதோ - கந்தர்ப்பன்கைப்புஷ்ப பாணம்அந்திநேரமேவருமே- தந்திரமோசெய்வதெல்லாமந்திர சபைநடேசா - - - - - (ஆசைதீர)

உ. தேடியவலவன்பேடுகூடிமருவாதிருந்தா-னீடியவுலகிற்பேடோ டிதின்றுப்புமோ நாடியவந்தவென்மேன்மோடிசெய்யலாகுமோ பாடியகின்னரர்போற்றவாடியசபைநடேசா - (ஆசை)

௩. கருமேகங்கண்டுமயிலொருமைப்படுலீலைபோற் - கரிசனமுட ன்சேர்தல்பெருமையதல்லவோ - திருவுளமகிழ்ந்தென்னைமரு வணைமீதினிற்-சுருதிப்புகழுந்தில்லைக்கனகசபைநடேசா ஆசை அ

---

ஏசல்-பதம்-இராகம்-சௌராஷ்டிரம்-ஏகதாளம்.

பல்லவி,

க, திருமுத்துப்பந்தலின்கீழ் - சுருதிப்பங்கயன்முதலோர்- இருபக் கம்தொழவேவரும் - இவரார்சொலலன்னே - ஒருபத்தன்செயுந் தவத்தைக் - கருதிநிருத்தங்காட்ட - வருகிறபேரம்பல-வாணர்கா ண்மின்னே - - - - - - - *

உ, வடகயிலைதனின்மூன்று - சுடருமுதித்ததுபோல் - விடபமிசை யேறிவரு - மிவரார்சொல்லன்னே - கடல்கடையும்போதெழுந்த விடவமுதுசெயுநேசர் - நடனபராபரதில்லைநாயகர்காண்மின்னே

௩, சுரரொனுமூவாயிரவர் - திரளுமுனிவருஞ்சூழ விரதமிசையேறி வரு - மிவரார்சொல்லன்னே - சரமதராஜனுமூன்று- புரமுமெரி படமுனிந்த-பரசிவகாமவல்லி பங்கர்காண்மின்னே - *

ச, கந்தருவரிசைபாட - மந்திரநான்மறைமுழங்க - இந்திரவிமான த்தில்வரு - மிவரார்சொல்லன்னே - அந்துவடிவினர்தொண்டர் புந்தியில்வாழ்பவர்வால - சந்திரசேகரானந்தத் - தாண்டவர்கா ண்மின்னே - - - - - - (கூ)

---

பதம். இராகம்-சௌராஷ்டிரம்-அடதாளம்.
பல்லவி.

நேசமேன்பூசலே ஞசையேன் பேசுதீர்
நேசமேன்பூசலே ஞசையேன் பேசுதீர்

அநுபல்லவி.

வாசஞ்சேர்தில்லைநடராஜனோமுந்தவும்மை - *
மோசஞ்செய்தாளேயந்தமோசம்போதாதோ - (நேச)

(சரணங்கள்.)

௧. வாடியென்றழைத்துற - வாடிமுகவிச்சைகள் - பாடியவள்மேற் சிந்து - பாடிக்கொள்வீரல்லற் - போடியென்கிறபேச்சைப்-போடீர்முன்னைமும்பேய்க்கூத் - தாடியென்பதுமெய்க்க - வாடியபாதமோ - - - - - (நேசமேன்)

௨. கொம்பனையாள்குதிரைக் - கொம்புரண்டானையொரு - கம்பஞ் சேரத்தீர்சேர்த்த - கம்புகன்றிடக்கண்டீர் - அம்பலவாணமே ஆரம்பமேனுமக்கிப்போ - தென்போலுமேயொருத்தி - யின்பஞ் செய்யாளோ - - - - (நேசமென்)

௩. பூண்டவாசையால்நேசம் - பூண்டபோதேயெனக்கு வேண்டாத வலைத்தீண்ட - வேண்டாமென்றேனே - ஆண்டாமோநீயொண்ணப்பெண் - டாண்டாற்றலைக்குமேலே - தாண்டவா நீரோ - தில்லைத்தாண்டவராயரோ - - - - நேசமேன் (ய)

பதம்- இராகம்-நாதநாமக்கிரியை-ஏகதாளம்,
பல்லவி.

நானேவலியவந்தேனேகோபம் - - *

அநுபல்லவி.

ஏனேஅம்பலத்துறைவானே - தூயோனே - - (நானே)

(சரணங்கள்.)

௧. தினதுமனதின்வன்மங்கண்டு - நெஞ்சி - னினையாதெல்லா நினைந்து நின்றுதுவண்டு - கனதனமெனுமுலையிரண்டு - நல்ல-காணிக்கையென-வலங்காரமாக்கொண்டு - - - (நானே)

௨. தாறேதுமிலையென்மீது - வீணே - தூறுசொல்லிப்பிரிந்து வந்தந்தருது - வேறேயொருவனாத்தூது- போக - விடுத்தசற்றீராதென்று வேண்டியிப்போது - - (நானே)

௩. தில்லையம்பலத்துளாடி - நின்ற - சிவனேநீர்வாராதசேதியைநாடி - முல்லையமளிமேற்கூடிக்- கொண்ட-மோகத்தைதயுன்னி-மூயங்கவேமந்தி - - - நானே (யக)

பதம் இராகம்-நீலாம்புரி-ஜம்பைதாளம்.

பல்லவி.

கனவிலும்மறப்பதில்லைமானே-நானும் - - *

அநுபல்லவி

கனகசபையிலாடுங்கடவுள்பதந்தானே - - (கனவி)

[சரணங்கள்,]

௧. ஒன்றாநின்றசுந்தரமும்-மூவுலகுக்- குயிர்க்குயிராகியேயுணர்த் தும்விசித்திரமுங்-குன்றாதவருளளிக்குந்திரமு -மென்னைக்- கூடி விளையாடியவுபாயதந்திரமுங் - - - (கனவி)

௨, இன்பவெள்ளத்தமுத்துமிங்கிதமுங்-கிருபை - யெங்கெங்குந்தா ளுயிருந்திலசஞ்சதமும் - அம்பரத்திலாடியபொற்பதமும்-புஷ்ப-வணைமீதிலெனையணைந்தவநுபோகவிதமுங் - (கனவி)

௩, ப்ரமகல்யாணசர்வேச-மெங்கள் - பார்ப்பதியெனுஞ்சிவகாமியி ராமணசங்-கருணைசந்திரசேகரவிலாசம் - நானுங் கனகசபையில னவரதமும்நடேசங் - - - கனவி(டுஉ)

---

பதம்-இராகம் எதுக்குலகாம்போதி -ஆதிதாளம்,

(பல்லவி)

தனித்திருக்கபோகாதுமானே - - தில்லை

அநுபல்லவி

வனத்துநடராஜர்தமைமருவாமல்நானே - (தனித்)

[சரணங்கள்]

௧, காமன்பெருங்கணைழவளைத்தெய்யப்-பூர்ண-கலைநிறைந்தமாமதியு ந்தழன்மாரிபெய்ய-சாமமெல்லாங்குயிற்கூவிவைய -வென்றலையி லெழுத்தோவிதென்றெண்ணிமனம்நைய - (தனித்)

௨. இரவோர்யுகமாகுதெங்கேசெல்வே னினி'-யென்தரத்துப்பெண் கட்கிதையேதென்று சொல்வேன் - கரவிலெய்யுமதனையென்று வெல்வேன் - வீறு -காதல்வெள்ளம்நீந்தஎன்றுகலந்தணைந்துபுல் வேன் - - - - - (தனித்)

௩, திங்கள்கங்கையரவணியும்வேணிப்-புலியூர்ச்சிவகாமவல்லியிடப் பாகமாக்காணீ-செங்கமலப்பதத்தில்மனமூணி-நானுந் - தேன்கமழ் மும்பூங்கொன்றைத்தொடரதணைக்கேணி - - தனி(டுஙு)



பதம்-இராகம்-கலியாணி அடதாளசாபு,

பல்லவி,

சபையில்வந்தெதிர்நில்லடி - அவனைக்கிட்டித்
தழுவவுன்றன - - - - மல்லடி.

அநுபல்லவி,

உபசரிப்பேன்சொல்லடி - - - அம்பலவாண
முளவதிந்தெனை - - - வெல்லடி
சுபதினமென்றனக்குச் - - சொற்பமாய்வந்ததிப்போ
அபினயம்பிடித்துக்கொண் - டலைந்துநீதிரிகிறாய்(சபை)

[சரணங்கள்,]

௧, வழக்கமொன்றறியாயோடி - நாலுபேர்சொன்ன - வார்த்தையுங் குறியாயோடி-இழுக்குக்குச்சிறியாயோடி -தினமெடுத்தா - விடம்பார்த்துச்சொறியாயோடி - உழக்கிற்கிழக்கும்மற்கொண் - டுண்டாக்குகிறாய்த்தேடி-மழைக்கொதுங்கிமனைக்கு -வழக்கிடுகிறாய்வாடி - - - - - - (சபை)

௨, தெருவிற்பெண்களைக்கூட்டுறா-யொளித்திருந்து-திருடக்கன்னக்கோற்றீட்டுறாய்-கருதித்திருகல்மூட்டுறாய் - விரித்துனது - கடினத்தொண்டையைக்காட்டுறாய்ப் - பெருமைக்கொருசரிகைப்புடைவை - யிரவல்வாங்கித்- தரமறியாதுடுத்தித் - தசுக்குகின்ற சித்திராங்கி - - - - (சபை)

௩, இடக்குத்தொழின்மறக்குமோ-வடியுனக்கு-வினிமேற்குணம்பிறக்குமோ-எடுத்தவடிசிறக்குமோ-வுன்னிடத்தினி லின்பரூபம்பிறக்குமோ-முடுக்காயம்பலத்தானை- முயங்குவேனென்று - திடுக்கிட்டெவருமெச்சத்-தென்பாய்ச்சொல்லுகிறாய்நன்று[சபை] (யிசு.



பதம்-இராகம்- சௌராஷ்டிரம் - ஆதிதாளம்.

(பல்லவி.)

தெருவில்வாரானோ என்னைச்சற்றே -திரும்பிப்பாரானோ

அநுபல்லவி.

உருவிலியொடுதிரிபுரத்தையுமுடனெரிசெய்த-நடனராஜன் (தெரு)

(சரணங்கள்.)

௧. வாசன்முன் நில்லானோ-வெனக்கொரு-வாசகஞ்சொல்லானோ-நேசமாய்ப்புல்லானோ-கழைவைத்த ராஜனைவெல்லானோ - தேசிகனம்பலவாணன் நடம்புரி தேவாதிதேவன்சிதம்பரநாதன்[தெருவி]

௨. போதுபோவதில்லையே - யெனக்கொரு - தூதுசொல்வாரில்லை யே - ஈதறிந்தேனில்லையே - யென்மேற்குற்றமேதொன்றுமில் லையே-வேதனுமாலுமூவாயிரருந்திரள் - விண்ணவருந்தொழவா டியபாதன் - - - - - - (தெரு)

௩. மெய்யென்றிருந்தேனே-யவனிடஞ்சைலங்கையறிந்தேனே -மையல் தணிந்தேனே பசந்திடு-மெய்புங்குளிர்ந்தேனே -வையகமும்பப் பதஞ்சலிபோற்றிடவாழுங்கனசபைநடராஜன் (தெருவில்வாரானே)

---

பதம்-இராகம்-குறிஞ்சி-ஆதிதாளம்.

பல்லவி,

கனவுகண்டெழுந்திருந்தேன்மானே-தில்லை

அநுபல்லவி,

அன்வரதநடராஜநற் கன்புசெய்பதானே - - (கனவு)

[சரணங்கள்,]

௧, தெருவினிற்பவனிவந்திடவுங் கண்டு - தெரிசித்தளவிலென்றன்சி வன்வாரதைப்படவும் ஒருகிளிபைத்தூதுபோகவிடவுமாலையுள்ள த்திலடங்காமலோடிப்பாய்த்தொடவுங் - - (கனவுகண்)

௨, கண்டவுடனவர்மீதில்விழவும் -வாசங்-கமழ்கொன்றைமாலை தனி ற்காதலுற்றழவும் - புண்டரீகபாதத்தைத்தொழவுங்-கொங்கைபூரி க்கவுடைதாழப்புறத்தரிகழவுங் - - (கனவு)

௩. அங்கசன்சமர்செய்ததறவு -மெத்த-வாருபபேராசையந்நேரமு ந்துறவுஞ்-செங்கமலவணைமீதுறவுந்திருத்-தில்லைத்தாண்டவனாச் சேர்ந்தின்பம்பெறவுங் - - - கனவுக (௰௩)

---

பதம் - இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்,

பல்லவி.

சொல்லவாராய்-சேதி-சொல்லவாராய்,

அநுபல்லவி,

சொல்லவாராய்சேதி - சுந்தரமாமின்னே

தில்லைநடராசனென்னைச்சேர்ந்தமாமையல் - (சொல்ல)

[சரணங்கள்,]

௧, அடுத்தடுத்துவந்துஅந்தரங்கம்பாராட்டித் - தடுக்காகமோடிசெ ய்தாற்சொல்வதேதுமானே - - - (சொல்ல)

உ, ஆசையாகினுலென்னவதுர்ஷ்டமுன்னிலைவேணும் - பேசவுமறி யாதபெண்பேதைநானடி. - - - (சொல்ல)

௩, இருவருமொருமித்திருந்தசுகங்களெல்லாம் ஒருவரறிவாரோஹரி லோமலாகுதே - - - - - (சொல்ல)

௪, சம்புசிவகாமிபங்கர்சந்திரசேகரர்-செம்பொனம்பலவாணர்சே ர்ந்தணைந்தமையல் - - - - -(சொலல(மை)

பதம்-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்,

(பல்லவி)

மையல்மிகவுமிஞ்சுதே-சாமிநீரிப்போ
மருவாதிருந்தாலென்செய்வேன்

அநுபல்லவி,

வையகம்புகழ்தில்லைவனநாதரோயென்சாமிமருமலர் மெத்தைமீதிலி ருவருமாயிருந்து-சருவிச்சுருள்கொடுத்து- மருவிமுத்துமுகநாட-

[சரணங்கள்] (மையல்)

க, வரிக்குயிலேழிசைகூவத்-தென்றலுந்தாவ- மன்மதன்மலர்க்கணை தூவ - உருக்குமதிதனிலே - யுலைவாய்மெழுகதும்போல்- உருகு தென்றனுளம் - பரவசமாயுடலம்-வருகுதுகாமவெள்ளம் - பெரு குதுவரவர - - - - (மையல்)

உ, களபகஸ்தூரிகள்பூசத் தேவரீருடன் - கலந்திங்கிதமொழிகள்பே ச-அளகமலர்கள்வீச-கணகனிலேயிருந்து அந்தரங்கமாகியெந்த னுளமறிந்து சிந்தைமகிழ்ந்துநீ-ரிந்தநாளிற்சேர- (மையல்)

௩, தில்லைமூதூரில்வாசரோ - மூவாயிரவர்-தினந்தினந்தொழுமீசரோ வல்லிசிவகாமிமகிழுஞ் சபேசரோமாதவர்பணியும்-பொற்பாதரோ தமிழ்க்கொருநீதரோ-யென்பிராணநாதரோவரவர (மையல்)

---

பதம்-இராகம்-எதுகுலகாம்போதி - அடதாளம்,

பல்லவி!

மனதினிற்றபவானுற்றினந்திலமிப்படி-வருமோவராதே - ❀

அநுபல்லவி.

தனதுக்குக்குறைவுண்டோவென்கிறீர் -தேவர்சித்த
மெனதுபாக்கியந்தில்லைக்கனகசபேசரோ மனதினிற்)

(சரணங்கள்.)

க, உருமத்துக்கமலம்போற்றிருமுகம்புலர்வானே - ஞெருமனதா யிருந்தாற் பெருமூச்சு வருவானேன் - அருமத்தமனதுதான்

திருவெங்குழலவுதே-பெருமைக்குத்தழுவுவ-துரிமையோசாமி
உ, எவர்மோகந்தன்னில்வீழ்ந்தெவர்மயமானாலும் - கவரியின்காற்றைப்போற்றுவளவேண்டாமோ-அவரவரிச்சைவைத்தால்நவரசருசிப்பால-நவபலங்காணுமன்றோ சிவகாமிபிராணேசரோ. (மனதி)
ரு, தயவானாலடிக்கடிசுயமாவரவேணும்பி - நீபவார்த்தை பேசினாற்செயலாவதேது - அயலாகவெனைத்தள்ளநியமமோதேவர்க்கு-மயலார்க்குஞ்சரியேநன்னயசபைவாணா ..... மனதினிற் (யக)

---

பதம்-இராகம் நீலாம்புரி - ஆதிதாளம்,

(பல்லவி-)

நினைத்துக்கொண்டாற்சகிக்கப்போமோ-தனக்குத்தானே
மிகராகியசாமிசெய்வித்தையை ..... ... *

அநுபல்லவி.

அனைத்துலகுந் துதிக்கு மம்பல வாண னென்ற
னந்தரங்கமறிந்தும்தத்தந்தவின்டசுகத்தை ... (நினைத்)

[சரணங்கள்.]

க, வெடித்தமல்லிகைமுல்லை - முடித்தென்குழலைநீவி - மடித்தசுருள்தந்திதழ் கடித்தசம்ப்ரமலீலை ... (நினைத்து)
உ, முலைவைநெருடிநெஞ்சை - உலைமெழுகாயுருக்கிக் - கலைநெகிழ்த்தியமிர்த நிலைசோதித்தவிதத்தை ... ... (நினைத்து)
ரு, முத்துமுலைமேற் கையை - வைத்துநகம்பதித்துச் - சித்திரமஞ்சத்திருத்தி முத்துமுத்தாடினதை ... ... (நினைத்து)
சு, நாமரூபமொன்றில்லாச் - சோமசேகரர்சிவ - காமசுந்தரிமகிழ்மேசம்பசரின்பம் ... ..... நினைத்து(உய)

பதம்- இராகம்-நீலாம்புரி - ஜம்பைதாளம்,

பல்லவி.

பிரிந்தாலுமறக்குதில்லைபெண்ணே........நடனம்

அநுபல்லவி,

புரிந்தாரம்பலவாணர்பூவைணயின்கண்ணே... ...(பிரிந்)

(சரணங்கள்.)

க, சந்தனகஸ்தூரிவகைபூசி - மெத்த - சரசஇங்கிதலீலைச்சுரதமொழிபேசி சந்ததமணைந்தால்வெகுவாசி - யிரவிற்- றனித்திருக்கும்பெண்ஜென்மந்தானென்னசீசி ... (பிரிந்தாலு)

உ. மூலமீதிலழுந்தவைத்துநகத்தைக் - கொஞ்சி - முகத்தின் முக ம்வைத்துக்குறிபடுத்தியுதரத்தை - கலைநெகிழ்த்தியுறவாடும்விகத் தை - நாளுங் - கலவியநுராகமநுபவத்திருந்தசுகத்தைப் ..(பிரி)

ரு. தென்கைலையம்பதியில்வாசர் - நாளுஞ் - சிவகாமவல்லியுடன்பி ரியாதநேசர் - என்கவலைதீர்க்குஞ்சுரும்வசர் - எங்குமிணையொரு வரில்லாத நேசர்நடராஜர் ... ... பிரிந்தாலும் (உக)



பதம்-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

எத்தனைதவஞ்செய்தாளோ மானே - தில்லை
நேசருனைப்புணரத்தானே ... *

அநுபல்லவி.

கர்த்தனெனத்தெரியப் - பொன்னம்பலத்துளாடுங்
காரணபூரணவாரணமானவர் .. (எத்தனைத்தவஞ்)

[சரணங்கள்]

க. சொக்கிறகைச்சூடுவாருக்கிப்போது- கொழுந்தும்வேருமுண்டா ச்சே - மேலும் -அக்கரவம்பூண்டமார்பர்தமக்குரத்நஹாரமு மு ண்டாச்சே - அந்தத் - தக்கனெனும் மாமன் - தலையையரிந்தார்க் குத் தாசுதண்ணியமுண்டாச்சே சற்றும் -வெட்கமில்லா திருவாணி க்குப்பட்டாடைமெத்தவுமுண்டாச்சே-யென்னம்மா(எத்தனைத்)

உ. ஒருத்தருமில்லாத பரதேசிக்கிப்போ தலகெல்லாமுற்றவாச்சே- பெருமுருத்திராக்ஷவடஞ் சூடுஞ்சடைகக்கிப்போ துயர்பொன் முராவாச்சே - கையில் - தர்த்தமான்கூய்ச்சலைக்கேட்டவருக்கிப் போது சங்கீதமுண்டாச்சே- புரம்சிரித்தெரித்தவருக்குச்சஜகர க்ஷகனெனுந்திருநாமமுண்டாச்சேயென்னம்மா ... (எத்)

ரு. யானைத்தோலும் புலித்தோலு மூடுத்தார்க்குஆடைத்திரளாச்சே உயர் - வானத்தினட்புவிசூடினார்க்கிப்போது மணிமுடியுண்டாச் சே மது-பானத்தைமுன்னாள் சுமந்தார்க்குச் சைவப்பழமெனப் பேராச்சே - பெண்கள் - மானத்தைப்போக்கினார்க்காசாரனெனு மொருமாபட்டமுண்டாச்சே-யென்னம்மா .... (எத்த)

ச. மாட்டிலேறி திரிவாருக்கு வேண்டிய வாகன முண்டாச்சே- தலை ஓட்டிலிரந்தேகுடிப்பாருக்கிப்போதுயர்பாத்திரமாச்சே - ஒரு வீட்டிற்குடியிருந்தேயறியாருக்கு விண்தோய் மதிலாச்சேசுடு-

காட்டி லாடுவார்க்குத்தில்லையென்றேயொரு காணியுமுண்டா
ச்சே - யென்னம்மா ...... .. ...... எத்தனைத்தலைஞ் (உஉ)



பதம்-இராகம்-யமுனாகல்யாணி-ஆதிதாளம்,

பல்லவி,

தெண்டனிட்டேனென்று சொல்வீர்நடேசர்க்குநான்
தெண்டனிட்டேனென்று ... சொல்வீர்

அநுபல்லவி,

அண்டமெல்லாம்பரவுங் .. ..........கொண்டல்காள்கும்பிட்டே
னுண்டவனொனுந்தில்லைத்தாண்டவராயர்முன்போய்த் ... (தெண்ட)

[சரணங்கள்,]

௧, பொருந்துங்காதல்கொண்டு - பொன்னிதழ்தேனுண்டு - இருந்
தோனும்சொல்லவோவிண்டு - ஏகாந்தந்தனிற்கண்டு ... .. (தெண்)

௨, கண்டால்வருமப்பேச்சு - கன்னிவயதிலேச்சு - பண்டுசொன்ன
தும்போச்சு...பார்வையவள்மேலாச்சு ..... ... (தெண்)

௩, மன்னும்நாணம்போக்கி - மனதைத்தாள்மலர்க்காக்கிச் - செஞ்
னிம்மற்கரந்தூக்கித் - தில்லைப்பதியைநோக்கித்.....தெண் (உ௩)

---

பதம்-இராகம்-காம்போதி-ஆதிதாளம்,

பல்லவி,

மனதறியாமல் மையல்கொண்டேன்- கொண்ட
மையலுக்கென்னபலன் ..... கண்டேன்

அநுபல்லவி,

தினமுங்கிருபைபுரியும்நேசர் ..........தில்லைச்
சிவகாமிமகிழ்ந்திடுந் - திருநடராஜர்......மனதறி

(சரணங்கள்-)

௧- மனத்தில்தாய்க்குவெறுப்பாச்சே - யினி - வரவரநிஷ்டூரப்பேச்
சே- நினைத்துக்கொண்டாற்பெருமூச்சே - பருவ - நேரிழை
யார்க்கிதெல்லாமேச்சு ........................மனதறியாமல்

௨- மதிகாய்வதென்னகொடுமையோ-மாரன் - மலர்க்கணை யெய்ய
நாறுகையோ-சதிக்குக்குயில்- கூவுதுபொய்யோ - நிமிஷந் - தா
னூறுயுகமாகுதையோ .... ... ... மனதறியாமல்

௩, துதிசெய்துசொன்னதொருகோடி- செய்தசுகலீலைதன்னைமிக
நாடி - அதிவிதமாக்கவிபாடி - தில்லை- யம்பலவாணனைநான்கூடி

## பதம்-இராகம்-நாதநாமக்கிரியை-துருவதாளம்,

### பல்லவி,

மனமுருகுது -விழிபுனல்பூணுது -மையல்பொருகுது - மதி
யனல்மூளுது - வருமுருவிலிசர - மென்னைத்தீண்டுது - வகை
யென்னசெய்வேன் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

### அநுபல்லவி,

அனவரதமு - மதிவிதத்தாண்டவ - மரவம்புலி-முனிதெரிசித்திடும்
ஹரஹரசிவசிவ-வென்னையாண்டரு - ளம்பலவாணா - மனமுருகுது-

### [சரணங்கள்,]

௧, தலமீதோருதாயென்தந்தை தமரோன்மைந்தர் தாமேன் - மல
ரோன் சந்தனமேன் புழுகேன்-மையல்சாஸ்வதமே - கலைசோருது
வளைசோருது நல்லகைசோருது - மெய்சோருது - கனமுலைசோரு
து பணிசோருது நெறிமுடிசோருதையோ ... ... ... ... ... ... *
இலையோ கிருபை நீவந்தெனையணை - யிலையோவினிநிரந்தரமந்திர-
மிலையே வினியுயிர் விடுவேன்பழி - பெய்துவதினியே (மனமு)

உ. விரகாக்கினிமேனியி லெழுகுதுவேண்டாம் வேழமுண்டகனி
போல்-ஒருராத்திரி நூறுகமாய்விழி யுறங்கேனுறங்கேன் ... ... *
அருளாற்புகழ்ந்திடுவதுமுனையே - அருளாற்றினம்பணிவதுமுனை
யே-அருளாற்றொழுதிடுவதுமுனையே அறிவேனறிவேன் ... ... *
கருணாகரதென் புலியூர்ச் சிவகாமசவுந்தரிபாகாவுன் - கருணைகடாக்ஷ
மேபுரிகுவாய் கனகசபேசா ..... (மனமுருகுது)

௩. தவசம்பவி தருணகுணந்தரு - தகுதிந்திமிதிமியென நின்று
ரு-சவதம்பெறத்திருநடனம்புரி-தருசங்கரனே ... *
நவசந்திரநுதல்வேல்விழிதரு - நவசிந்தையிலுருகியிதம்பெற- நவ
பஞ்சணையதனின்மகிழ்ந்தெனை-நணுபிலணைந்தாள் ... ... ... *
சிவசங்கரதிரிசூலாதர-திரியம்பகதிரிலோகநாயக - திரிபுண்டரஹர
மகாதேவ-தேவராஜயமூர்த்தி ... ... மனமுருகுது உ௫)

---

முதல்புத்தகப்பதிப்புப்பதம்- உ௫-ம்-முற்றிற்று,

---



உ சிவமயம்,
சபாநாதர்பேரில்
தில்லைவிடங்கன்.



# மாரிமுத்தாப்பிள்ளை பாடிய கீர்த்தநம்.

கீர்த்தநம் - இராகம் - ஆநந்தபைரவி - ஆதிதாளம்,

பல்லவி,

தில்லைச்சிதம்பரமே - அல்லாமல்வே-தில்லைச்சுதந்தரமே

அநுபல்லவி,

சொல்லக்கேளிருநெஞ்சே சொல்லுவாய்சிவகாம
வல்லிக்கன் புளசபை வாணனிருக்குந் (தில்லைச்)

[சரணங்கள்,]

க. தோற்றுமும்மலவேனைக்காற்றிலிடுபஞ்சாகத் - தூற்றியொழித்
துக்குறையாற்றிமயக்கந்திரத் - தேற்றியணியுந்திரு நீற்றிருவி
ருவினை - மாற்றிப்பரகதியி லேற்றிவைப்பதற்கு... (தில்லை)

உ, தத்துவநிலைதெரிந் தொத்தமனமொடிரு - கைத்தலமெதிரொரு
வித்தைமுடியீதில் வைத்தபிறகுபயபத்தியுடனேதெரி - சித்த
பொழுதிலுயர் முத்திதந்தாளத்... ... ... (தில்லை)

ங, காசினிதனிற்கயி லாசமொன்றொருநட - ராசரிருந்து பாவநாசஞ்
செய்வதிதுவே - வாசஞ்செய்வோருக்கு மோசம்வராதுகிலேச
ம்வராதெம பாசம்வராது... ... ..... ...(தில்லை(க)

கீர்த்தநம் - இராகம் - சௌராஷ்டிரம் - ஆதிதாளம்.

பல்லவி,

தெரிசித்தபேனாப்பரிசுத்தராக்கச் - சிதம்பரமன்றியுண்டோ

அநுபல்லவி,

விரிவுற்றபூலோக - கயிலையென்றுள - மொரு-மித்துநடந்தெதிர்
கொண்டு மேரு - வொத்தவிரண்டோடிரண்டு- கோ - புரத்தைக்
கண்ணாரவேகண்டு ... ... .... (தெரிசித்தபேனாப்)

[சரணங்கள்,]

க, மேலைத்திசைக்கோபுரத்தினில் கற்பகவேழமுகன்றனை வாழ்த்தி
நல்ல - நீலத்திருமயில்மேலுறுங்குமரன் முன்னின்று தொழுதடிபோ
ற்றி - அநு - கூல்ச்சிவகங்கைமுழுகியந்நீராயுட்கொண்டுமனக்கு
றையாற்றி - இந்த - ஞாலத்தையீன்ற சிவகாமிசுந்தரிபாலுற்றிரு
வினைமாற்றி - வெகு - சீலத்துடன்மலர்சாத்தி-அர்த்த - சாமத்தி
லேதொழுதேத்தித் ..... ... ... (தரிசித்த)

௨, நம்பித்திருமூலஸ்தானத்திலே துதி நாத்கழும்பேறப்பயின்று உமை - அம்பிகைதாளைப்பணிந்துமலாதியோடைந்துபுலத்தியவென்று - நிக - மும்பர்வணங்கும்பேரம்பலந்தன்னைக்கண்டுண்மையாட்சேவித்தகன்று - கள்ள - வெம்பிறவிப்பிணிவேரைப்பொடிசெயுஞ் - செம்பொற்சபைநாடிச்சென்று - கொடிக் - கம்பத்தருகினின்று - லிகையால் - கும்பிட்டரகராவென்று, ...*

(௩) ஞானசபைதன்னைச்சேவித்தங்குள்ள ரகசியவுண்மையை நாடியொளி - யானத்தையற்புத ஞானக்கண்ணாலறிந் தானந்த வாரியிலாடித்-தவ-மோனத்துடனங்கிருந்து செபக்கண்முழுதுஞ்செபித்தன்புநீடி - நாளும்வானத்தவர்க்கும் கிடையாதமுத்தி - நிதானத்திற்கவழிதேடி - மெய்த்தி-யானத்திலதுபாடி - யக்கி - யானத்தைவேரறச்சாடித்... ... (தெரிசித்தபேரைப்(௨)

கீர்த்தநம் - இராகம் - பூரிகலிபாணி - ஏகதாளம்.

பல்லவி,

தெய்வீகஸ்தலமிந்தத்தில்லை - இந்த - வைபோகமெங்கெங்குமில்லை

அநுபல்லவி.

அய்யவேதனுமாலுந்தேடியேகாணச் - செய்யதாமரைத்தாளாலாடியேநின்ற - வையனிருந்துவாசஞ் செய்யுந்தென்கயிலாச - மாமேயினைசொல்லப்போமோவொருவராலே... ... (தெய்வீக)

க, மதிலாயெழுந்துமஞ்சாக்ஷரமே - சுற்றி - வளைந்திருப்பதுஞ்சி

[சரணங்கள்]

தம்பரமே - மேலும் - சதுர்வேதம்நாலுங்கோபுரமே - யாகிச்சமைந்துநிற்பதும் நிலவறமே - இது - அதனாலெத்தலத்தையும் வெல்லுமே - புலவம்-பதிலுமிதைத்தானேசொல்லுமே - யார்க்கும் - கதிதந்தவிதத்தாலே - பதியொன்றையிதைப்போலே காணேனுண்டென்று - வீணேசொல்லக்கூடுமோ .... .. (தெய்)

௨, மூர்த்தியுந்தீர்த்தமுந்தலமு - மூன்று - முக்கியமு மொருமித்ததலமுங் - சன்றேற்பார்த்தவர்க்குண்டோசஞ்சலமும்- நினைவின்படியேயவந்தெய்துஞ்சகலமும் - வேத - சாஸ்திரமுமிதைத்தானேயோதுமே - நிம்ஷிந் - தோத்திரமாயுரைத்தாலும்போதுமே யிதிலோர்-மாத்திரையாம்போது விற்றிருந்தாற்றீது - வருமோ பிறவியைத் - தருமோசற்றுந்தராது... ... .. (தெய்)

௩. எப்போதும்நிலந்தருவதுவே - இது -வெல்லாச்சமயத்துக்கும் பொதுவே-இதற் - கொப்பானதலமினியெதுவே - விராட் - டுள்ளக்கமலத்தானமிதுவே- வச்சிரக் - கொப்பாருங்குறைமச்சியோர்-

யாகனுர் -காலத் - தப்பாதவாறபிஷேகனுர் - தமக்-கொப்பாந்தலி ந்தமது-மெய்ப்பானதலமிது - வுண்மையிதிலுள்ள - வண்மையி ன்னமனந்தம் .... ..... தெய்வீக(௫)

கீர்த்தநம்-இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்,

பல்லவி.

எந்தத்தலத்தையுமிந்தத்தலத்துக் கிணைசொல்லக்கூடாதே - ஐயன்

அநுபல்லவி.

சொந்தத்தலஞ் சிதம்பரமென்று மனதினிற் - சிந்தித்துக்கருமலை போலே எதிர் - வந்திட்டமுயலகன்மேலே - ஆநந்தக்கூத்தாடினத் [தாலே

[சரணங்கள்,]

௧, ஆதியில்வெண்குட்டந்தீர்ந்து - கவுடதேசத்தரசன் பொன்னிற மாகுஞ்தேகம்-நீசச் - சாதியின் மூவர்பலைத்தல் மைபோய்க்கதி சார்ந்தாராதலால்தெய்வீகம் - ஒரு - வேதியனாயிலோர்சோதிட் டுக்கூடுபோய் - வீட்டிற்புகுந்ததுகாகம் - பின்னுந் - தீதறுதவத் தாலெப்போதுந்தரிசலஞ் செய்திடும்மார்புலிநாசம் - முன்னம்- பெய்ததுபொன்மழைமேகம் - இந்த -வைபோகமின்னமநேகம்

௨, கழுகுபசிக்கத்தவறியிறந்த-கயலுமடைந்ததுகதிபெ நீரில் - மு ழுகியெழும்பவிளமையைத்தந்து - முதுமையைத் தீர்த்ததிப்ப தியே-கூவி - யழுதபுலிக்குட்டியுண்டிளப்பாற - அருகில்வந்த அ புயோததியே-கொலை - பழிசெய்யும்பார்ப்பானொருவனுக் கமு த்திபாலித்ததையன்சந்நிதியே - அத - மலித்தைமயதினந்துதி யே செய்து மேலிட்டுச்சொல்லுஞ்சுருதியே ... (எந்தத்)

௩, எங்கெங்குத்தானிதைப் பூலோககயிலாச - மென்றுரைப்பொரு பெருக் இதி - லங்கமிறந்துதிருப்பிப்பிறப்பாரோ - வாடியதாளை க்கண்டோரும் - மலர்ப் - பங்கயன்மால்முதலோர்வந்தருச்சனை- பண்ணுகிறமுரரதைப்பாரும்- ஒளி - பொங்குந்தொளாயிரத்தொ ண்ணூற்றொன்பது - பங்குக்கலையிதிலாருந் - தல - மெங்கெங்கு மோர்கலைசாரு-மதுவு மிங்கர்த்தசாமத்துற்சேரும்... எந்தத்(௬)

கீர்த்தநம் - இராகம் - பியாகடை- ஆதிதாளம்,

பல்லவி.

எந்நாளும்வாசமாய்ச்சிதம்பரஸ்தலத்திலேஇருக்கத்தவஞ் செய்தேனு

அநுபல்லவி,

பன்னகம்புலிகாகம் ... ... பார்ப்பான்புலையன்முதற் பத்திசெய்மயிதில்-முத்திபெற்றிடலாலே ... (எந்த ளும்)

[சரணங்கள்.]

௧. முந்தியன்னையுதரந்தனிலேகருவி - ருந்துதிருவயிறு, நொந்து
டசியொடு - பிறந்துநிலமிசைதவிழ்ந்துதளர்நடை - நடந்துபரு
வமாகி இந்தமனைமனைவிமைந்தர்நிதிபலவு - மெந்த னுடைமை
யிது - சொந்தமெனவேசொல்லிச் - சிந்தைதனின்மதமிகுந்துப
லபல-வகந்தைகளேசெய்து திரிந்ததல்லாமல் .... எந்நா

௨. வெட்டமுலையிற்செருங்க விட்டபணியழகும் ஒட்டிவைச்சிரமிழை
த்தசுட்டியழகும்நுதற்- பொட்டழகுமிடையிற்பட்டழகுமுடை
ய- கட்டழகியர்வலையிற் - கிட்டியறிவழிந்துமட்டியெனவேதொ
டர்ந்-தொட்டினில்மொய்த்தசிறு சிட்டெனவேயவர்கள்- தெட்டு
முயக்கிலகப்பட்டுமிகவுமதி - கெட்டுமெலிந்தலைந்திட்ட தல்லா
மல் .... .... ..... ... (எந்நா)

௩, தேசமதற்குளொரு காசுகொடுக்கப்பிணா - யாசமனத்தர்தமைப்
போஜனெனத்துதிசெய் - தாசுமுகற்கவிகள்-பேசியலுத்துமனங்
கூசவேதேயல்லாமல் - ஈசனதிகப்பிரகாசனணிதருமத் - தூசனு-
மைமகிழுல்லாசனடியவர்கள் - நேசனிலகுகயிலாசன்கனகசபை-
வாசன்புலிசைநட-ராஜனைச்சேவித்து... .... எந்நாளும்(௫)

கீர்த்தநம் இராகம்- மத்தியமாவதி-ஏகதாளம்,

பல்லவி,

பலமந்திரத்திற்கும்-பலமந்திரம்பொன்னம்பலமென்னும் - மந்தி [ரமே

அநுபல்லவி,

புலவர்க்குமுனிவர்க்கும் ... ...பலவர்க்குந்தியானிக்கப்
பொதுவாயிருக்கும்மந்திர-மதுவேசுருக்கமந்திரம் ... (பலம)

[சரணங்கள்.]

௧, செனனமரணவாதைநீக்கியமந்திரஞ்-சேருமும்மலமாயைபோக்
கியமந்திரம்-மனதின்மெய்ஞ்ஞானமுண்டாக்கியமந்திரம்-மந்திர
த்திற்கெல்லாஞ்சிலாக்கியமந்திரம் ..... (பலம)

௨. முதுமைபோயிளமைகொடுத்திட்டமந்திரம்-மூன்றுபுலையர் நீச
ம்விடுத்திட்டமந்திரங்-கதியிலோர்கண்காகமடுத்திட்டமந்திரங்-கா
ட்டுபுலியைப்பாம்பைத்தடுத்திட்டமந்திரம் ... (பலம)

௩, அதுவேயவர்க்குங்காயசித்திக்குமந்திரம்-, அதுவேநினைவின்ப
டிசித்திக்குமந்திரம்-அதுவேயழிவிலாதமுத்திக்குமந்திரம்- அது
வேசிந்தித்தநெஞ்சிற்றித்திக்குமந்திரம் பலம(௬)

கீர்த்தநம்-இராகம்-மோகனம்- சாபுதாளம்,

பரந்தனையடைந்திடவேணுமென்றுசிதம்பரந்தனை யயுடைங்கள்

அநுபல்லவி,

பரந்தனைதருமிந்தத்தலந்தனிலேயிருந்த .... .... *
மரந்தரெல்லாருந்தவவேந்தரோ .... ... (பரந்தனை)

[சரணங்கள்.]

௧. காட்டிலிருக்கின்றபுலியும்பாம்பும்பெற்ற - காக்ஷியுங்கேட்டிருப்பீர்களே - வீட்டினிலிருக்கின்றகாகமுமுயர்ந்தமேல் - வீட்டினிற்சென்றதுங்கேட்டிருப்பீர்களே .... ... (பரந்தனை)

௨, சாதியிலீனமுள்ளபுலையர்மூவரிதிற் - றனித்தனியே புனிதராகினர்- வேதியரில்திருபாவியொருவரிதில்மேவிப்பரகதியிலேகினர்

௩. வெள்ளியினாலிலங்கு ளையணிருக்கச்செய்த - வீட்டைவடகயிலையென்பாரே - தெள்ளியசெம்பொன்னினாற் - செய்தவீடித்தைத் தென்கயிலாசமென்பரே .. .... ... ..பரந்தனை (எ)

கீர்த்தநம்-இராகம்-ஆரபி-ஆதிதாளம்- (பல்லவி.)

ஒருக்கால்சிவசிதம்பரமென்று நீசொன்னாலிருக்காதாம்வினையே.. *

(அநுபல்லவி,) கருக்காறருக்கிதுதெரியும்பொதுவிலொரு
காலைத்தூக்கிநின்றகோலத்தைமனதில்வைத்(தொரு)

[சரணங்கள்;]

௧. சூழ்வலிபுடையபஞ்சாக் கினியிடைநின்று - சொரூபமுங்கரிவானேன் - மனை - வாழ்வைவெறுத்துக்கனிகாயுஞ்சருகுந்தின்று -மாதவம்புரிவானேன் - பல - வேள்விகளைச்செய்தந்தவோமகுண்டத்தினெய்யை - வீணிலேசொரிவானேன் - காதுங்கேள்வியில்லாதமுழு மோனிகளாய்த்தலையிற் கிளத்திட்ட சடைதனை - வளைத்திட்டுத்திரிவானேன் .... ... .... ... ...(ஒருக்கால்)

௨. வேதமந்திரஞ்சொல்லியாயிரத்தெண்டன்புவி - மீதினில்விழுவானேன் - இரு - பாதமுஞ்சிவந்திடத்தலங்கடோறுந்திரிந்து பலதெய்வந்தொழுவானேன் - கொல்லன் - ஊதுந்துருத்திப்போலேவாயுவைக்கும்பித்துடல் - யோகத்திலெழுவானேன் - ஐந்துபூதங்களுங்கலங்கவங்கப்பிரதக்ஷணமாய்ப் - புரண்டுபுரண்டுமெதிமருண்டெழுந்தழுவானேன் .... ... .... (ஒருக்கால்)

௩. உருக்கியுடலைமெத்தவருத்தியுறக்கத்தையு - மூனையுந்துறப்பானேன் . சிலை - யனாக்கில்லா திருவாணியாகிவுலகவாழ்க்கை-யனைத்தையும்மறப்பானேன் - வரு நரைக்குந்திரைக்குங்கற்பமருந்திச்சித்தர்களாகி - நாடெங்குப்பறப்பானேன் - சபைத்-திரைக்குள்ளேமறைவாகியிருக்கும்ரகசியத்தின் - திறந்தெரியாமல் வீணேயிறந்தின்னம்பிறப்பானேன்... .... ...(ஒருக்கால் (அ)

கீர்த்தனம்-இராகம்-பைரவி- ஏகதாளம்.

பல்லவி.

சிவசிதம்பரமென்றுநினைப்பாயே - உனக் - கபசெயம்வாராதொன்
[றும்மனப்பேயே

அநுபல்லவி.

தவசமுமுனக்கிதென்றறிவாயே - நல்ல - கனகசபையில்புலி
பனகமுனிவர்தொழவனவரதநடனந்தனையரூடுஞ் ... (சிவசிதம்)

[சரணங்கள்,]

௧. சன்மவினைபொய்களையாறலாமே - பொல்லா - மன்மதவாதைதீ
ர்ந்துதேறலாமே - சென்ம - சாகரக்கரையேறலாமே-யெழுந்து-
சென்றபொழுதிலுஞ்சும்மா-நின்றபோதிலு - மொன்றைத்தின்ற
போதிலும் படுக்கின்றபோதிலும்நீ ... .... (சிவசிதம்)

௨. மனிதருறவை மெய்யென்றிருக்காதே - கதிர்முன் - பனியான
வாழ்வைச்செல்வஞ்செருக்காதே - தனிவேதமந்திரமிதைச்சுருக்
காதே-பசி-தந்தவேளையுமிடர்- வந்தவேளையுமனம் - நொந்தவே
ளையும்பின்-னெந்தவேளையும்நீ ... ... ... (சிவசிதம்)

௩. ஒருமந்திரத்தையும்நீசெபிக்காதே - யிந்தத் - திருமந்திரமன்றி
யொன்றும்லெபிக்காதே - கருமந்தப்பிதஞ்செய்துதவிக்காதே-
தில்லைக் - காட்டினிலையன்செய்த - வாட்டினிலுறுதியை - நாட்டு
வொன்றிலு-மாட்டிநில்லாதே... ...... .... சிவசிதம்(௩)

கீர்த்தனம்- இராகம்-செஞ்சுருட்டி- ஆதிதாளம்.

பல்லவி,

இன்னமுமொருஸ்தல மிருங்குமென்றெருக்காலே - யேன்மலைக்கி
[றாய்மனதே

அநுபல்லவி.

சொன்னசொன்னஸ்தலங்க - ளெங்கு மோடிக்களைத்துச்
சோதித்தறிந்தாலிந்த ஆதிச்சிதம்பரம்போல் ..(இன்ன)

[சரணங்கள்.]

௧. சருக்கரையும்நெய்மாவுஞ் சரியாய்நிறம்பெற்றாலுஞ் - சருக்கரை
ருசிமாவிலிருப்பதுபிரயாசம் - முருக்குஞ்செம்பரத்தையும்நிற
மொன்றானாலுமந்த முருக்கினிலுண்டோவாசம்-தரிக்கும்வச்சிரக்
கல்லுந்தரிப்புமொத்திருந்தாலுந் - தறிப்பைத்தள்ளி வச்சிரந்
தனைத்தரிப்பதல்லாசம் - உரைக்கும்ஸ்தலமனந்தந்தரைக்குளிருந்
திட்டாலு - மும்பர்வந்துதொழும் பொன்னம்பலமேகயிலாசம்

௨. உப்புங்கர்ப்பூரமு மொன்றைப்போலிருந்தாலு - மொங்கும்
பெரிதாய்க்கர்ப்பூரந்தனைச்சொல்லாரோ - இப்புவியிலெவர்க்கும்
யோக்கியந்தருங்காவிரிக் கேற்பதுசணலுமோ - ஒப்பரிதாய்விளங்

குந்தெய்வீககங்கையாற்றுக் - குவமையெடுத்துரைப்பதுவர்க்க ழியாற்றுநீரோ - அப்படிப்போலநேகம்ஸ்தலமிருந்தாலு மந்த வல்லவினைதொலைக்குந்தில்லைப்பதிக்குநேரோ ...... (இன்ன)
௩. விண்ணுலகத்திலிடுமீனினமெல்லாங்கூடி - வெண்மைநிறமாமொ ருதண்மதிமுன்னில்லாது கண்ணுலவியவல்லி திரளாய்ப்பூத்தாலு மொரு - தாமரைக்கொவ்வாது - மண்ணுலகத்திலுள்ளதருக்களை னைத்துங்கூடி - மருவுலவுங்கற்பகத் தருவுக்கிணைவராது - புண்ணி யஸ்தலங்கள்பலவிருந்தும் நடேசன்வாழும் புண்டரீகபுரம்போ ற் கண்டுசொல்லவேறேது ..... ......................... இன்ன(௰)

கீர்த்தநம்-இராகம்-எதுகுலகாம்போதி- ஆதிதாளம்.

பல்லவி,

காலைத்தூக்கிநின்றாடுந்தெய்வமேயென்னைக் - கைதூக்கியாள்தெய்வ [மே

அநுபல்லவி,

வேலைத்தூக்கும்பிள்ளை...... ................ தனைப்பெற்றதெய்வமே மின்னும்புகழ்சேர்தில்லைப்பொன்னம்பலத்திலொரு.........(காலை)

[சரணங்கள், ]

௧. செங்கையில்மான்தூக்கிச்சிவந்தமழுவுந்தூக்கி - அங்கத்திலொரு பெண்ணையறுதினந்தூக்கி - கங்கையைத்திங்களைக்கதித்தசடையித் தூக்கிஇங்குமங்குமாய்த்தேடியிருவர்கண்டறியாத ...... (காலை)
௨. நந்திமத்தளந்தூக்க நாரதர்யாழ்தூக்கத் -தொந்தமென்றயன்று ளம்சுதியொடுதூக்கசிந்தைமகிழ்ந்துவாமேனோர் சென்னிமேற் சரந் தூக்கமுந்தும்வலியுடையமுயலகனுனைத்தூக்க ............ (காலை)
௩- கும்பமண்டத்தைத்தூக்க கொடுங்கைக்கும்பத்தைத்தூக்கப்பை ம்பொற்சுவர்கொடுங்கைப்பாரத்தைத்தூக்க எம்பிபாரத்தை விரா ட்டியதாமரை தூக்கச் - செம்பொன்னம்பலத்திலே தெற்குமு கமாயொரு ..................................(காலை(௰௧)

கீர்த்தநம்-இராகம்-புன்னாகவாராளி ஏகதாளம்.

(பல்லவி.)

உன்முகம்பார்த்தபயமென்று - லென்முகத்தருளாமல்
தென்முகமாயிருப்பதென்ன-வைம்முகத்தையாவே

அநுபல்லவி.

மின்முகம்பார்த்தாடுந்தில்லைமேவும்நடேசநேயருக்கன்
தன்முகம்பார்த்திடவிரும்புந்-தாமரைபோல்நான்விரும்பி (உன்மு)

[சரணங்கள். ]

௧. யார்க்கோவந்தவிருந்தென்வே - யறியாதுபோலிருந்தாற்-பார்க்

கிறவர்யாரினியென்பரிதாபம்முழுதுந்தீர்க்கிறதெய்வமறு தெய்வ முனையன்றியுண்டோ - நீர்க்குமிழியாக்கைதனை நீக்குமுன்வந்தாட்கொள்வையென் ... ... ... ... ... (முன்)

௨, தாக்கியதாளினைமுடிமேற் - சுமக்குமுயலகன்போலப் - பூக்கியஞ்செய்யாத - கொடும்பாதகனுதலினாலே - கூக்குறல்செய்தோலமிட்டுக் - கூவிபுன்றன்கோயில்தனை - நோக்கிவலமாகவந்திநூறுதெண்டனிட்டெழுந்து ..... ..... ... (உன்)

௩, காரினிற்பூங்கமுகுதொடுங் - காவனந்தமேவுபுலி - யூரினிற்காண்பவர்க்குமுத்தியுதவும்நடராயா - பாரினிலிவ்வுருவெடுத்துன்பதமலர்க்காளாகாமனீரினிலம்புலிபோலே - நிலைகலங்கித்தலைவணங்கி

கீர்த்தநம்-இராகம்-காவேரி-திரிபுடைதாளம்,

பல்லவி,

ஏதுக்குதவியிந்தகாயம் - சுமந்திதினால்வருவதேதாதாயம்

அநுபல்லவி,

சீதப்பிறையணிசோதிச்சடைமுடித் - தேவன்புலிசையில் - மேவம்பலவன்பொற் - பாதப்பணிவிடைக் காகித்தவஞ்செய்து பவத்தையொழிக்காமலவத்திலேபிறந் ... ... ... (தேதுக்கு)

[சரணங்கள்.]

௧, தருமராஜன்தறிக்குங்கட்டை - பிரமன் - தைக்குமொன்பதுபீற்றற்சட்டை-திருமகட்கொருகன்மகுட்டை- காலன்கிட்டும்போதினிலொடலொட்டைவருமேயிதை மெய்யென்போர்க்குப் பெரும்பழி- மாங்கிஸமுஞ்சீழும்வழும்பும்நிறைகுழி- யருமையினியிடுமதனையொழியொழி - யஃருநம்பொன்னுது நீரின்மேற்குமிழி-

௨, விஞ்சும்மும்மலஞ்சேரும்வீடு - புல - வேடனாவரிருக்குங்காடு- சஞ்சிதப்பறவைக்கோர்கூடு- இதைச்- சதமென்றெண்ணுவதெல்லாங்கேடு - மஞ்சின்மேலிடுவான- வில்லிணைகூறும்-வாழ்வைநிலையென்று - மயங்கித்தினந்தோறுந்- தஞ்சிலைம்பொறி-கலங்கிமதிமாறுஞ்சுவாசமடங்கினுற்றெடக்கூடாதுநாறும் ..... (ஏதுக்கு)

௩, கொடுவினைமுளைக்குந்தோல்மூட்டங் - கழுகு - கொடும்நாய்நரிக்கும்விருந்தாட்டஞ் - சுடுகாட்டக்கினிக்கிடுகாட்ட - மந்தச்சுக்ஷம்பார்த்திடில்பொம்மலாட்டம்-விடுவிடுருவெடுத்திடுவேதனைமுன்னை-வினைக்குக்கிருபைமருந் தளிக்கவல்லவன்னை- படரும்மெய்யன்பொன்னம்பலவனடிதன்னைப் பணிந்தாற்பிறவிநோய்தணிந்துபோம்பின்னை ... ... ... ஏதுக்கு(௰க)

திந்தால்துதி.

கீர்த்தநம்-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

என்ன துணிவாய் நான் பயப்படாமல்வந்துன்
றிணையடிபணிவேன் ..... ஐயா

அநுபல்லவி.

பொன்னம்பலவாணனே முன்னமுன்றனைப்பாடும்
புலவனை நீவிழுங்கும் புதுமையைக்கேட்டிருந்தும் (என்)

[சரணங்கள்,]

௧. பாப்கிறமாடொன்றுவாயிலில்மேவுதே- பாம்பும்புலியுமிருபக்க
முந்தாவுதே - பேயும்பூதமுமுன்னும்பின்னுமுலாவுதே - பிடி
த்தகைமானன்டம்வெடித்திடக்கூவுதே ... ... (என்ன)

௨. கொழுந்துவிட்டோங்கு மழற்பிழம்பாகுமுன்னுறுப்பு - கொ
டியதில்லைக்காடுநீகுடியிருக்கப்பொறுப்பு - ஒழிந்திருக்காதெப்
போதுமுனதுநெஞ்சிற்கறுப்பு - உனைத்தான் பித்தனென்பதை
நினைத்தாற்சீறுமென்றும்வெறுப்பு ... ... (என்ன)

௩. ஆதியில்மாலயனுமடிமுடிதேடுவானே-யாதியந்தமில்லாநின்றரு
மறைபாடுவோமே - பாதிமதியைச்சடைமீதினிற்சூடுவோனே-
பாதத்தைத்தூக்கிபொன்னம்பலத்தினின்றுடுவோனே (என்ன)

கீர்த்தநம்-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

வீடுமம்பலமாகிநீருமந்தரமானீர் - வேளைப்பொல்லாப்பாகியோ

அநுபல்லவி.

காடுங்காணியாகியோ ரோடுங்கையிற்கொண்டீரோ
கனகசபைநாதரோபனகபூஷணனோ (வீடு)

[சரணங்கள்,]

௧. உளக்கனிவாய்பலவுயிர்களுக்கும்படிதா - வளக்கிறமைத்துனன்
வந்தருகினிலிருந்தும்-இளக்கரியாமற்செந்நெலீராழியாலறத்தை
யளக்குஞ்சிமாட்டிசொந்தமனையாட்டியாயிருந்தும் (வீடு)

௨. குட்டும்பற்பலநிதிக்கெல்லாந்தலைவனுகச் - சூட்டுங்குபேரனீங்கா
த்தோழனென்றிருந்தும் - பூட்டகம்வெளியாச்சே புலிபாம்புக்
குள்ளேயுன்ற-ஆட்டமெல்லாமடங்கியனாயுடம்பானீலாயா (வீடு)

௩. வெள்ளைப்பிலுக்கைப்பார்த்தால்மேல்பூச்சல்லாம - துள்ளிதும்
புறம்பிலுமொன்றிலுமில்லையே - ஏள்ளிலெண்ணெய்போலெங்கு

யிருப்பேனென்றொருக்காலே - துள்ளிக்கூத்தாடினீரோசொர்ண
சபைநாதரோ ... ..... ... ... வீதி (௰௫)

கீர்த்தநம்- இராகம் -சௌராஷ்டிரம்- ஆதிதாளம்.

( பல்லவி. )

என்னபிழைப்புன்றல்பிழைப்பையா ........ இதை
யெண்ணிப்பார்த்தாலார்க்கும்பழிப்பையா ..... *

அநுபல்லவி,

அன்னங்கண்டறியாமற்சொரூபமும்மாறினீர்... *
ஆட்டையெடுத்துத்துணிந்தம்பலமேறினீர்(என்ன)

[சரணங்கள்.]

௧, கூடைமண்சுமந்துண்ணப்பரிந்தீரோ - முனிவர்-கொண்டபெண்களைத்துகிலுரிந்தீரோ - ஓடெடுத்திரந்துண்டுதிரிந்தீரோ - பக்கியாலொருவன்பிள்ளையைக்கழுத்தரிந்தீரோ- வேடனாகிவிஜயன்வில்லாலடிபட்டீர்-காடேகுடியிருப்பாய்க்கல்லாலடிபட்டீரோ (என்ன)

௨, பெண்டாட்டிமுழுநீலிதானுச்சே-பெற்ற- பிள்ளைதகப்பன்சாமியாய்ப்போச்சே - பண்டாமைத்துனன்தானெனும்பேச்சே- யிரும்-பழிப்புக்கிடமாய்ச்சாம்பன்மேற்பூச்சே- அண்டற்கரியகூத்தையாடியுமுமக்கிங்கே - யெண்டிக்கறியாமூவாயிரத்திலொருபங்கே ..... ... ... ... ..... (என்ன)

௩, மலைவேடனெச்சிலைத்தின்றீரோ - குதிரை - மாறுடிமழுவேந்தின்றீரோ-விலைமாதிடத்திற்றூதுசென்றீரோ- வெட்கம்-விட்டுச்சபைநாதனென்றீரோ - கலையிற்கோமணந்தன்னைக் களவுசெய்தெடுத்தீரோ-தலையிற்பாதிசோமனைத்தரித்துத்தோலுடுத்தீரோ. என்ன(௰௬).

கீர்த்தநம்-இராகம்- புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

உம்மைப்போலாட்டையெடுத் தம்பலத்திலிற்பா - சொருவனாகநாணேனையா

அநுபல்லவி,

செம்மைமலர்த்திருவாழுஞ்........... சிதம்பரநாதரோ
தின்னுமலொருபிள்ளைகொன்றபழிகாரரோ (உம்மை)

[சரணங்கள்,]

௧, யானைத்தோல்புலித்தோலாடையுண்டத்தாட்சி-யதுவல்லாமலெலும்பைக்கோத்தணிந்ததற்குச்சாட்சி - மானைக்கையிற்பிடித்த வாறேயுமக்குத்தாட்சி - மழுவெடுத்து மெய்யாச்சோ கழுகுக்கேற்றகண்காட்சி ..... ... ... ... ..... (உம்மை)

உ. இடையிற்கிடந்தவாயனடியை மெள்ளத்தேடிக் - கிட்டும்போது மச்சானென்னெருட்டினீருறவாடி - அடவிப்புலியும்பாம்பு மகிழ தொருமித்துக்கூடி - யாட்டுக்காலுக் கொட்டிப் போட்டிருக்கு தேநாடி .... ... ... ... (உம்மை)

௩. வெற்றிவிஜயன்பன்றி விரும்பியடிபட்டீரோ - வேடன்வாய்த் தசையெச்சில்வேண்டிருசிகண்டீரோ - சிற்றிடைச்சியைபாகஞ்சேர்த் துத்தானேகொண்டீரோ - சிதம்பரோசரோ யாட்டாற்றிருமேனி துவண்டீரோ ... ... ... உம்மை(யென)

கீர்த்தநம்-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

(பல்லவி.)

இன்னம்வயிரமுன் றனெஞ்சிலே யிருப்ப
தென்னகாரணத்திற்.................. கையா

அநுபல்லவி;

தன்னந்தனியஞ்சிப்................ பொன்னம்பலேசனே நீ
சலப்பிரளயகாலத்திற் - சர்வசங்காரஞ்செய்தும் ......(இன்ன)

(சரணங்கள்.)

க. கருப்புவில்மதன்சண்டைக் கெதிர்ந்தபோதுமனக் - கறுப்புத் தீரக்கண்ணால்வதைத்ததும் - நெருப்புப்போலேசீறி வந்திடுங் கொடுங்கால - னிலத்திலலறிவிழவுதைத்ததுவும் - மருப்புக்கரிவ யிற்றைக்கிழித்துப்போர்த்ததும் - பொல்லா - மருத்துவனுருயிர் சிதைத்திதுவும் - பொருப்பைப்பறித்தசைக்கு மரக்கனைக்கால் நக த்தாற் - பூமிதனிலமுந்தப்புதைத்ததுவும் போதாமல் (இன்ன)

உ. சோலீதிரிபுரம்வெந்துநீறுநீறாகச் - சிரித்துமனதின்படி முடித்ததுவும் - வேருடன்அருக்கன்பல்முறிந்துபலபலென்று - விழுந்திடக்கன்னத்தில்அடித்ததுவும் - ஆரையும்செயம்பண்ணித் திக்கு விசையம்பெற்ற - அந்தகாசுரனைமடித்ததுவும் - கோரநரசிங் கத்தைவீரசிம்புள்ளாய்வந்து - கொத்திஇழுத்துரத்தங் குடித்த துவும்பற்றாமல் ... ... ... ... (இன்னப்)

௩. தன்னைமறந்துமதம் மிகுந்துமகஞ் செய்தக்கன் - தலையையரிந் தழலில்தீத்ததுவும் - பின்னும்தககனுக்குமருகனென்னுஞ் சந் திரன் - பிலன்ஒழிந்கிடக்காலால்தேய்த்ததுவும் - அன்னந்தனைப் பரியாய்வந்தபிரமன்றலை - ஐந்தில்ஒன்றையறுத்துச் சாய்த்தது வும் - வன்னம்பலவாயுள்ளபொன்னம்பலவாணரோ - வலியச்சலந் தரனைமாய்த்ததுவும்அலலாமல்........................ இன்னம்(யெஅ)

கீர்த்தநம்-இராகம்-தோடி- ஆதிதாளம்.
(பல்லவி.)
எந்நேரமுமொருகாலைத் தூக்கி நொண்டிக்கொண்
டிருக்கிறவகையேதையா ... ..... *
அநுபல்லவி,
பொன்னுடர்போற்றுந்தொல்லை- நன்னுடரோத்துந்தில்லைப்
பொன்னம்பலவாணரோ-யின்னந்தானுமூன்றுமல் (எந்நே)

[சரணங்கள்,]

க. எக்கியநெருப்பவிக்கத்தக்கன்வீட்டினடந்தோ - ஏமனைவுதைத்த
போதெதிர்ச்சுளுக்கேறிதொந்தோ - சிக்கெனவேபிடித்துச் சந்
திரனைநிலத்திற்-றேய்த்தபோதினிலுனைந்தோ ... *
உக்கிரசாமுண்டியுடன்வாதுக்காடியசந்தோ- உண்டநஞ்சுடம்பெ
ங்குமூறிக்கால்வழிவந்தோ. - தக்கபுலியாம்பிநுவர்க்குங் கூத்தாடி
யாடிச்-சலித்துத்தானோபொற்பாதம்வலித்துத்தானோதேவரீர் *

உ. பொருட்பெண்ணிடத்திற்சந்துபோனத்தினாற்றுவண்டோ- பொ
ல்லாமுயல்மேல்வைத்தபோதினில்வலிகண்டோ-அருச்சுனனுடன்
சட்டிச்கீழ்மேலாய் விழுந்தபோ - ததிர்ந்து நரம்பு புறண்டோ-
சிரசிற்றண்ணீரோறித் தேகத்தில்வாதங் கொண்டோ - சேர்க்குந்
தோழன்போதுமக்கேறகவேமுடமுண்டோ - எருத்தின்மேலே
பெண்சாதியுத்தூக்கிக்கொண்டுபாய்ந்-தேறும்போதிலொரு
காற்றுறுமாறுப்ப்புரண்டோ ... ... (எந்நேர)

ந. மலைவில்லிலடிவைத்துவளைக்கமக்களித்திட்டோ - வாநோர்வணங்
கும்போதுமகுடமுடிகள்பட்டோ- நலமிகுகயிலைவிட்டெழுந்த
ருளித்தில்லையினடந்தவருத்தத்தைத்தொட்டோ ... *
கலகலெனும்பொற்சிலம்பழுந்திக்கால்வலித்திட்டோ- கடியபூத
கன்பத்துமுடிமேலூறுத்திநட்டோ-பலபலவிதத்திலெவ்விதமோ
வறியேன்பொன்னம்பலவிலாசரோதில்லைத்தலநடேசரோநீர்தான் *

கீர்த்தநம்-இராகம்-தேவகாந்தாரி-சாபுதாளம்-
பல்லவி,
இதைவிடக்குதித்துக் கூத்தாடினாலுமூவா
யிரத்திலோர்பங்குமுமக்கே ............*
அநுபல்லவி,
பொதுவினிலாடினால் விடுவேரோநாகத்தைப் - பூண்டவரோ தில்லைத்

தாண்டவரேயுமக் - கதிகடங்குக்கிடங்காறோ மும்மிடபங்கி லரைப்
பங்குதனையுமே ர் வரைப்பெண் ணுக்களித்தீரோ ... (இதை)

[சரணங்கள்.]

௧. தெண்டிரைக்கங்கையைச் சிரசின்மேலேதேக்கித் - திங்களைக்கதி
ரொச்செர்தீயைமுக்கண்ணாக்கி - எண்டிசைத்தலைவருந் தொழுதி
டமான்மழு-வேந்தித்தெவ்றிசைநே க்கி ... ... *
விண்டலத்தோடண்டமெங்குமோசைபோக்கி - மிகவுங்குமிறுவீ
ரவிருதாங்கின்கிணிவீக்கி - அண்டரியமுயலின்மேலொருகாற்று
க்கி யசைந்தசைந்தொருகாலையுசந்து தூக்கித்தூக்கி (இதைவிட)

௨. படர்ந்தசடைகளிருபக்கமுந் துவண்டோடப் - பாதிப்பிறைகு
லுங்கக்காதிற்குழையுமாட - நடந்துகட்டியஞ்சொல்விநந்திமத்
தளந்தட்ட-நாரதர்யாழ்பாட ..... ... ..... *
தொடர்ந்துதான்முகன்தாளந்தூக்கிப்பண்ணெறிபோடச் சுமக்கு
ஞ்சேடனுமுடிதுளக்கிநெளித்துவாட - இடந்தெரியாதெங்குமட
ர்ந்துபூமழைமூட - விந்திராதிபரும்பார்க்கவந்துகூட்டங்கூட -

௩. வெப்புலித்தோலாடைவிளங்கியரையிற்றோண - மெலிவுதீர்ந்
தொருபாம்பும்புலியும்மகிழ்ச்சிபூண - கப்பீரமாய்வாதுக்காடு
கின்றபத்ரகாளிமனதுநாண ..... ... ..... *
பம்மைமல்லாரிதுந்துமியாதியாழ்வேண - பல்லியமார்ப்பரிக்கப்
பலரும்வந்தடிபேண - நப்பினைவரைக்காக்குஞ்செம்பொன்னம்
பலவாண-நாதரோநீர்கொண்டகாதலிகண்காண ..... இதை(உய)

கீர்த்தநம் இராகம் ஆநந்தபைரவி ஆதிதாளம்.

பல்லவி,

அம்பலத்தாடிமடிப்பென்பதையுமிடத்தி லறிந்தே னறிந்தேன் [ஐயா

அநுபல்லவி,

வம்பவிழ்கொன்றைசூடுஞ் - சிதம்பரேசரேயுமது - மார்க்கத்தை
யெல்லாமுன்றிப்பார்க்கப்போனால்கூத்தாச்சே .... ... (அம்பல)

[சரணங்கள்.]—௧, பெண்டிருடன்பிறந்த மைத்துனனுக்கரு
மைப்-பிள்ளையைப்பார்த்துக்கண்ணைற்சுட்டீரோ - பின்னும் - கண்
டோர்நகைப்பதற்குப்பெண் கொடுத்தமாமனைக் - கழுத்தையறுத்
தழவிலிட்டீரோ - உமக் - குண்டானகுணந்தானோவேதமெல்லாங்கற்
றோன்றன் - றொருதலைதனைக்கொய்துவிட்டீரோ - சடைப் - பண்டா
ரம்போல்வந்துகுழந்தையையறுத்துண்ட - பசியாளியென்றெவ

கும்பழிக்கத்தலைப்பட்டீரோ ... ... ... (அம்பல)
உ, பேரிட்டெதிர்த்தருகில்வந்தமுப்புரத்தாரைப் - புன்சிரிப்பி லேகுடிகெடுத்தீரோ - வய - தீமொட்டும்நிறைந்தபின்மார்க்கண்டனைத்தொடர்ந்த - எமனைச்சொற்புரட்டினற்றடுத்தீரோ - முனி- வோரிட்டமுடன்சேருமாதர்கள்மயக்கங்கொண் - டுடைகுலைந்திட வேடமெடுத்தீரோ- பன்றி- வீரிட்டுவரும்போது கூரிட்டகணைகொண்ட - விஜயனுடன்வேடன்போல்வீண்சண்டைதொடுத்தீரோ, அ
ரு, செம்மனக்கிழவிதந்திடும்பிட்டைத்தின்றுவேலை - செய்யாமல் விளையாடிக்குதித்தீரோ - அதற் - கும்மைப் பிரம்பினலேயரசனடித்தாலனைத் - துயிர்க்குமடிபடவிதித்தீரோ-எங்க-ளம்மைசிவகாமியிணைபிரியாதிருந்துமழுந்தச்சிரசிலோர்பெண்பதித்தீரோ-யன்பர் தம்மைவந்தாண்டருளுஞ்சிதம்பரேசரோநீர்தான் -தாண்டிமுயலகனைத்தீண்டியேமிதித்தீரோ ... ... ... அம்பல(உக)

கீர்த்தநம்-இராகம் சுருட்டி-சாபுதாளம்.

பல்லவி.

ஏதுக்கித்தனைமோடிதானுமக் கென்றன்மேலையா.

அநுபல்லவி.

பாதிப்பிறையைச்சடையிற்றரித்த பரமரேதில்லைப் பதிநடேசரே

(சரணங்கள்.)

க. ஆட்டுக்காலெடுத்தம்பலத்தினின்றீரதனைச்சொன்னேனோ - ஒற்றை - மாட்டுக்காரனொன்றுருடனாகிலும்வாய்மதஞ்சொன்னேனோ- தலை - வோட்டிலேயிரந்துண்டுவொன்றந்த வுண்மையைச்சொன்னேனோ - பல்லைக் - காட்டிமுப்புரத்தார்முன்னே நின்ற கதையுமெச்சிலுண்டதையுஞ்சொன்னேனோ ... (ஏதுக்)

உ, சாதியுந்தாயுந்தகப்பனுமில்லாத்தனியனென்றேனோ - மண்ணு ற் - பாதியுடம்பாகிக் கள்ளுஞ் சுமந்திட்ட பறையனென்றேனோ- சாதி - மேட்டதமாய்பிள்ளைக்குக் குறவர்வீட்டிற்பெண்கொண்டு டொன்றேனோ - மறை - யோதிவணங்குநடேசனையும்மைநாடுனைப்பாருமில்லாததப்பிலியென்றேனோ ... (ஏதுக்)

ரு, அழுந்தவேபிரம்படிப்பட்டகூலியாளனென்றேனோ- தசை- கழிந்தவள்ளெளும்பணிந்தபயித்தியகாரனென்றேனோ - கட்டப்- பழந்துணியின்றித்தோ லுடுத்ததைப்பழிப்புச் சொன்னேனோ- சிறு - குழந்தையைக்கொல்ல ஆண்டியாய்வந்த குட்டெலாம்வெளிவிட்டுச்சொன்னேனோ ... ஏதுக்கித்தனை (உஉ)

கீர்த்தநம்- இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்,

பல்லவி,

பாருங்கள்வந்துபாருங்களாட்டுது - பாம்புபிடாரனையே

அநுபல்லவி,

ஆருங்காணவேதில்லை ... ... யம்பலத்திப்வாடிக்கை
யாலேபதமுயலோன்-மேலேவைத்தவேடிக்கை...... ... (பாருங்கள்)

[சரணங்கள்,]

௧, ஆரூரிற்புற்றிடமமர்ந்திருந்ததும்போச்சு - ஆபரணமாய்மெய்
யிலணிந்ததும்வீண்போச்சு - காரூரில்விடமுண்ட கதைசொ ச்
சொன்னாற்லச்சு - கைச்சிலைக்குக்கயிறாய்க் கட்டியதுமென்னுச்சு

௨, ககனத்தசரவித்தைகற்றதனுலென்ன - கற்றுமெல்லாவல்லசித்த
னுகியுமென்ன - சகலமந்திரத்திற்குந்தலைவனுகியுமென்ன - தலை
யிற்கட்டிக்கேற்றபச்சிலைவைத்திருந்துமென்ன .... ...... (பாருங்)

௩, மைக்கண்மடந்தை காணக்கைக்குள் மழுவைவைத்து - மாயவு
யிராம்பந்தைக்காயச்செப்பின் மறைத்துத் - தக்கதொழிலுக்கே
ற்றகொக்கிறகைத்தரித்துச் - சபைக்கேற்றக் கூத்தாடச்சமர்த்த
னென்பதையுற்றுப் ... ..... பாருங்கள் (உ௩)

நிந்தாஸ்துதி,

பதம்- இராகம் மோஹனம்-ஆதிதாளம்,

பல்லவி.

என்னகாரியத்துக்கிந்தப்-பேயாண்டிமே-லிச்சைகொண்டாய்மகளே

அநுபல்லவி.

தன்னேயொருவரில்லாப் பொன்னம்பலவன்கண்ணிற்
றழலைக்காட்டியெவர்க்கும்- கழலைக்காட்டுவானே(என்)

[சரணங்கள்.]

௧, காடுசஞ்சாரம் வீடொன்றில்லாமல்வேறே - காணேனுஸ்தியொ
ருமாடேயல்லாமல் - ஓடியிரந்தான்பசிதில்லாமற்பின்னு - முண்
டாலெச்சிலைவேண்டா மென்று சற்றுஞ்சொல்லாமல் - ஓர்ந்து
பார்த்தாலுருவருவந்தங்கெடுவானே - பேர்ந்தபிட்டைவிரும்பி
ப்பிரம்படிபடுவானே - சார்ந்தவனாயம்பலந்தனி லேற்றிடுவா
னே-தீர்ந்தபக்ஷம்நெற்றியிற்றிருநீற்றையிடுவானே ..........(என்)

௨, சமர்த்தாய்த்தேட்டாண்மைதேடவறியாயோ - இந்தத் - தப்பினி
மேலாசையையெறியாயோ - இமப்புரட்டனென்பதுங் குறியா
யோ - மழு - வெடுக்கும்வன்னெஞ்சனென்பதெண்ணித்தான்பிறி

யாயோ - ஏலாதுசொன்னேனிசமென்றென்னுவாயென்சொல்
லை - மாலைகொள்ளாதேகொண்டால்வருமேயதிகசல்லை - போலே
யல்லாதுள்ளேபுட்டுக்காட்டினுற்கல்லை - தோலேபல்லாலுரிக்க
த்துணியொன்றவனுக்கில்லை ... .... (என்ன)

௩, குதிரைமாராடினவெடுத்தனடிமெத்தக் - கொஞ்சமதியுடையபித்
தனடி - முதுமையிளமையில்லச்சித்தனடி - சடை - முடிக்கு
ளொருபெண்ணையடக்குஞ்சமர்த்தனடி - முன்னம்நகைத்துச்
செய்தான் முப்புரத்தாரைமோசம் - என்னசொல்லியுமனக்கே
னைனுடனேசம் - அன்னங்கண்டறிவதற்குநுதினம்பிரயாசம்-
பொன்னம்பலவனையுட்புகுந்துபார்த்தாலாகாசம் - என்ன (உச)



ஸ்ரீசிவகாமியம்மைமேபரில

கீர்த்தநம்-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

எனித்தப்பராக்குவேலைமீதிலுனக் கென்னவன்மமோ - வம்மா

அநுபல்லவி,

பானந்துலவிய பழந்தனிற்கயற் பாயும்புலிசையி லாயன்றிசை
முகன்-வாணிந்திரன்றொழுமானந்தநடேசர்வாமமுறுஞ்சிவகாமசவுந்

[சரணங்கள்,] [தரி எனித்த

௧, துக்கசாகரத்தழுந்தி யருட்கரையேறிலேன் - பிறவிச் - சுழலி
லலைந்தலைந்துழலுந்தொழிலின்னமாறிலேன் - பக்கந்தனிலெனக்
குதவியுனையன்றிவேறிலேன் - ஒழியாப் - பாரப்பெருஞ்சமுசார
ச்சுமைவிட்டுத்தேறிலேன் - அதனுற் - றிக்குவேறில்லைவறுமைச்
கலியிப்போ- தீர்த்திடாவிடிற்பார்த்தவர்கட்கொப்போ - மக்கள்
மேற்பெற்றதாயார்க்கும்வெறுப்போ - வருத்தஞ்சொன்னேற்கா
தை - மறைத்ததன்னைக்கொப்போ ..... (எனித்த)

௨, சொல்லிமுடிகிறதல்லமனதின்விசாரமோ - முடியச் - சோதிக்
கமௌனஞ்சாதிப்பதுப்பக்ஷபாரமோ - நல்லதல்லவுனக்கிதவும்
நான்செய்தநேரமோ - என்னை - நடுவினிலசவிடுவதுனக்கலங்
காரமோ - சொல்லச்சொல்லக்- கல்லுங்கரையுமுன்னெஞ்சங்கரை
யாயோ - கடியடழிவரும்படி செய்தாய்நீயே - அல்லல்வினைதொ
லைத்தாளவருவாயே - யடிமைப் படைத்தவர்க்காளக்கடன்றுயே-

௩, பிஞ்சுமதிநுதல்வஞ்சியெனுமபிராமியே - தெய்வப் - பிடிக்கு
மொருகுறக்கொடிக்கும்வாய்த்தநன்மாமியே - தஞ்சமெனுமடி

யார்களிடத்துறைவாயிலே - கொன்றைத் - தாமமணிந்திடுமேம
ச்சைச்சிவக மிம்ய உனதிரு - செஞ்சரோருகச்சரணமேசுகித்-
திரும்பியொருவரைச் செய்திடேன்றுதி - அஞ்சலஞ்செலேன்றன
வேவிநீ-சட்டை யினிச்செய்வதனைத் தும்பெண்மதி.... (உ௫)
மாரிமுத்தாப்பிள்ளைபாடிய கீர்த்தநம் முற்றிற்று.



இஃது - சீர்காழி-அருணாசலக்கவிராயர் பாடியது,



கீர்த்தநம்- இராகம் - சௌராஷ்டிரம்-அடதாளசாப்பு

பல்லவி.

தில்லைத்தலம்போலே ... சொல்லப்புவிமீதிற்
றெய்வத்தலங்களுண்டோ ... .... நாளும்

அநுபல்லவி.

சொல்லுந் தொளாயிரத் தொண்ணூற் றொன்பது தூயகலைநிறைபா
த்திரம்- எங்கும்-ம்பாய்வருமோர்கலைமாத்திரம் - ஆக - வாயிரமாஞ்
சிவக்ஷேத்திரந் ... ... (தில்லைத்தலம்)

[சரணங்கள்.]

௧. பத்திமணிக்கோபுரத்தைக்கண்டால் - சிவபத்தியிலேமனநீதூக்கு
ம்- அதைஉய்த்துவரைரச்சித்தம்பரிசுத்தம்-உள்ளேசிவஞானந்தே
க்கும் - அந்த - நெற்றியில் பூதிப்பொடித்தூள்கள்பட்டாலும் நீ
ங்காப்பிணியெல்லாம்நீக்கும்- வந்து - சற்றேறமிதித்தாலும்எல்லவ
ர்க்குஞ்சிவ-தன்மதினைவையுண்டாக்கும்-பூர்வ - கன்மவினைகளைப்
போக்கும்-மறுசென்மப்எடாமலேகாக்கும் ... (தில்லைத்)

௨. நங்கைசிவகாமிசந்நிதிகாணவே - நன்மையிலேநிலைநாட்டும் - ம
கா லிங்கத்திருமூலநாதனைச்சேவிக்க - நெஞ்சுக்கவலையை ஓட்டும்-
ஆ - நங்கசபைதனைக்கண்களால்காணவே - அற்புதந்தானேபாரா
ட்டுஞ் - சற்றும் -சங்கையில்லாச்சிவகங்கையிலமூழ்கியே- தானஞ்
செய்வார்க்கின்பங்காட்டும் சிவ-ஞானந்தப்பாமலேகூட்டும் - முத்
தி-யானந்தத்தில்முழுக்காட்டும் ... ... (தில்லைத்)

௩. கோடிமறையாலுஞ்சொல்லிமுடியுமோ- கோடானகோடி உல்லா
சம்- ஐயன் - ஆடியபாதம்வணியாதபேருக் - கந்தவிடவேறுண்
டோமோசம்-நாளும்-தேடிடமூவருந்தேவரும்வந்து - தினந்தின
ஞ்செய்குவர்வாசம்- உண்மை -நாடியசாலோகமேமுதலாகிய-நா
லுக்குக்கும்விலாசம்-ஒருக்-காலும்வராதிமபாசம்-இதுவே- பூலோ
ககயிலாசம் ... ... ... ... தில்லைத்தலம்(க)

## இஃது-வைத்தீசுரன்கோயில்- குமாரசாமிகவிராயர்பாடியது.



சொற்கட்டு அர்த்தமுள்ள-கீர்த்தநம்-இ-ம்-சௌராஷ்டிராம் ஆதிதாளம்

(பல்லவி.)

ஆடவெடுத்தபாதம் நம்மையாளவெடுத்த பாதம்,

அநுபல்லவி,

தோடவிழ்கஞ்சவாவி சூழுந்தில்லைநடராஜர் - சுகமிழைத்துயினை வருந்தும்பஞ்சமலத்தொந்தமகலத் தொந்தோந்தொந்தோந்தொந்தோந்தோமென் ... .... ..... (ஆடவெடுத்த)

[சரணங்கள்,]

க. பறவைநுழைந்திடுங்குடம்பை - அரவுரிபோற்பவசாகரத்துழலுடம்பை-உறுதியெனும்மடமைமாற்றி- விடயவழி யுளஞ்செல்லாமலேதேற்றி - கனைப்பற்றிமறலியைவென்றவெற்றிக்- கழல்கணீர்கணீரென்ன - மலர்க்கையேந்தும்வன்னிதகதகதகென - சறுவசாக்ஷியாய்நின்று - நடநந்தொழு தவர்க்கபரசெல்வந் - தகுந்தகுந்தகுந்தகுந்தகுந்தகுந்தகுமென் ... (ஆடவெடுத்த)

உ. பொய்வகைமதங்களைப்போக்கி - வேடமும்நீறும் - பொருளென்னுமெய்ம்மையையுண்டாக்கித் - தெய்வத்தொழிலைந்து மிலங்கத் தேவிமேல்வைத்த - திருவருட்பார்வை துலங்கக் - கலிவிலங்கத் துய்யமலர்ச் சிலம்புகலின்கலின்கலினென்னச் சாரும் முனிவரரும்ஜெயஜெயஜெயெனச் சைவவைதிகசிவசமையம்மெய் கண்டதெய்வந்-தாந்தாந் தாந்தாந் தாந்தாந்தாந்தாந் தாந்தாந்தாமென் (ஆடவெடுத்த)

ங. பரிதிசதகோடிபோற்றோன்றி -யொருபொற்பாத - பதுமம்முயலகன்மேலூன்றி - இருவரின்னிசையாழ்பாடப் - புலியும்பாம்புமேத்திவணங்கிக்கொண்டாடச் - சுருதிகூடத்திருமலைக்கந்துந்தந்தனுந்தாதாவெனச் - சிந்திக்குமரன்மாலையன் தாதா வெனவொருதுடியன்பிலர்க்குந் தெரிசித்தளவில்லீ டுண் டுண் டுண் டுண் டுண் டுண் டுண் டுண் டுண்டென் (ஆடவெடுத்தபாதம்)

---

திந்தாஸ்துதி-கீர்த்தநம்-இராகம் - பரிசு-ஏகதாளம்.

பல்லவி,

திருக்கூத்திற்குத்துணிந்தம்பலத்தில்வந்துமின்னந் ... *
தினமறைவேன்சொல்லும் ஐயரே ...... *

அநுபல்லவி

மருத்கூவிளம்புனை .... ... சடைமீதிலொருத்தியை
வைத்துக்கொண்டசெய்திமறைத்தால்மறைக்கலாமோ ... திரு

[ சரணங்கள் ]

௧, ஆதிக்கமனையாட்டிபாதியுடம்பானத்தை யறிவார்சளுலகுள்ளோ
ர்யாரும் - வாதுக்காடினகாலசைந்துபோனத்தைநீர்மறைப்பதெ
ப்படியென்ணிப்பாரும் - போதாக்குறைக்குமூத்தமகன்காற் ச
ப்பாணிக்காற்புதுமையிதின்மேலுண்டோவயிறும் பெருவயிறு-
எதுக்கென்றுசொல்லலாஞ்சமாதானந்தேவரீரிருக்குமிடம் வெளி
யென்றிருக்குஞ்சொல்லும்தநீர் ... ... (திருக்கூத்)

௨, இஷ்டமாயன்னம்பாலிருக்கத்தலையோட்டினிலிரந்த பித்தனென்
றுசொல்லடங்குமோ- சட்டஞ்சட்டமொருகண்ணிலாதவனென்று
தாணியோர்சொல்லும்வார்த்தைமடங்குமோ - பிட்டுக்கொருத்தி
கூலியாளாய்ச் - சம்பந்திகைப் - பிரப்பினலடிபட்ட பேச்சொ
ளிக்குமோ-வொருசட்டியிற்கொக்கவித்த-வேடனையின்றும் - தலை
க்கறிதனையுண்டுஞ்சைவமுதல்வனென்றுந் (திருக்கூத்)

௩, ஹரஹரா கோவணமுமோடுந்திருடி நீரென்பவர்வாயை நமூ
டலாமோ - உளைபெற்றதிருக்கோலையுரைத்த செந்தமிழ்க்கோ
வையுட்கொண்டதும்மை விட்டுப்போமோ - ஒருவரதிர்காலல்
லோ ரகசியம்மூவாயிரவரறிந்திருந்து - மென்றும்ரகசியமோ
தெரிசித்தவர்க்குமுக்தியளிக்குஞ்சுசீலரோ திருமலைக்குகதாசன்றமி
ழ்க்கநுகூலரோ ... ... ... (திருக்கூத்திற்)

இஃது - சிதம்பரம் - அமிர்தகவி-குப்பையபிள்ளைபாடியது.

கீர்த்தநம்-இராகம்- நாதநாமக்கிரியை ஏகதாளம்.

பல்லவி,

தெரிசிக்கவேண்டும்கனகசபை-தெரிசிக்கவேண்டும்... *

அநுபல்லவி.

தெரிசித்தபொழுதங்கேவரமுத்திபெறலாகும் .... ... .... ...*
பரதத்துடனேயனவரதத்தாண்டவருபந் ......... (தெரிசிக்க)

[சரணங்கள்,]

௧, சாத்திரமாறுநால்வேதம்மதிற்றாணுகச் - சமயமிருபத்தெட்டாக
மமுமன்பெருப்பூதம் - போற்றியபதினெண்புராணஞ் சிறுதா
ணுத்திரம் - பொருந்தியகலையறுபத்துநாலும்பக்கத்தில் - எற்று
ங்கைமரமும்விநாடியும் - ஆற்றதினுரமும்ஆணிவரிச்சும்- பார்த்
தவெழுபத்திராயிரமாமிருநூற்றிரு -பத்துநாலுபுவனஞ்சுற்றிவ

ருங்கமலந்-சோற்றுந்தத்துவந்தொண் ணூற்ருறுப்பல்கணிவாசல்
தொட்டொன்பதுகும்பமடாவிருந்தின்ப- தொடுக்குஞ்சிற்றேருடு
மாயிரத்தெட்டு-வடுக்கும்மேனுடுஞ்சுவாசமுந் - தோயவேவிருபத்
தோராயிரத்தறுநூறும் - நெயமேனும்நமச்சிவாயப்படிமுன்னி
ன்று ... ... ...(தெரிசிக்க)

உ. கங்கையும்மதியமுந்தரித்தசடைமுடியுங் - கதித்தநெற்றியிற் பி
றையுமித்ததிருவெண்ணீறும் - பங்கயமதனமும்புருவச்சிலையுமுக்
கண்ணும்-பதித்தகதிர்க்குண்டலமதித்தவிலைமண்டலந் - சங்குமு
ல்விடமும்மார்பிற்பணியுந் தொங்குபொன்னாடமுமாபரணமுஞ்
செங்கையின்மழுமானுமுடிக்கைடமருகமுஞ் சிவந்த பூதாம்பர
ங்குவித்தவிடையழகும் நங்கையுமைபார்வதியிடத்தனிமமணமகி
ழ்-நாகரீகமுந்தங்கத்தேகமொருபுறமும் நாதகிண்கிணியுந் -தண்
டைச்சிலம்பு-பாதமேலணியும் புனணிபணிமிக- நாடும்பூபலகன்
மே லாடும்பொருளிருவர் - தேடுங்கர்த்தனையன்பு கூடிமனமே
கண்டு ... ... ... (தெரிசிக்க)

௩. இரணியவன்மன்வெண்பிணிதீரவேமன - மிரங்கிக்கருணைபொழி
வரங்கடருபவனை ஒருமுனிமகனுக்குயுயர்பமோயாததிதனை - யுரி
மையுடனழைத்துப்பருகவளித்தவனை - யரிமகன்றனையேநெற்றி
விழியா-லெரிசெய்தவனையே முத்துத்தாண்டவர்-சரசமானகவிக்
குத்தருபதங்கொடுத்தோனைச்- சந்ததமடியவர்வந்துவணங்கிநின்
று பரவுஞ்சிவனைச்செஞ்சொலமிர்தக்கவிதுதிசெய்-பையரவணி
ந்தோனை வையகம்பணிந்தோனைப்-பகரும்மெய்யருளை மூவாயிர
வர் - பகிழரும்பொருளைக் காலன்விடு-பாசந்தனிற்படாமனேச
மாகரட்சிக்கும்-மாசிலாதநடராஜமூர்த்தியைநித்தந்-தெரி.. (க)



சபாநாதர்பேரில்பாடிய-கீர்த்தநம்-பதம்.

முற்றிற்று.



